INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# கல்வெட்டில் ஊர்ப் பெயர்கள்

ஆர். ஆளவந்தார்

# கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள்

ஆசிரியர் :

ஆர். ஆளவந்தார்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

டி. டி. டி. ஐ. தரமணி

சென்னை - 600 113

## BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | — | Kalvettil Ūrpeyargaḷ |
| Author | | R. ALAVANDAR<br>International Institute of Tamil Studies, Madras-600 113 |
| Publisher | — | International Institute of Tamil Studies, Madras-600 113. |
| Publication Number | — | 69 |
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Date of Publication | — | May, 1983 |
| Paper used | — | 16kg D/Dy White printing |
| Size of the book | — | 21×18 Cms |
| Printing Types used | — | 10 Point |
| Number of Copies Printed | — | 1200 |
| Number of pages | — | 214 + vi = 220 |
| **Price** | — | **Rs. 12/- (Rupees Twelve)** |
| Printers | — | Novel Art Printers<br>Madras-600 014.<br>Phone : 82731 |
| Binding | — | Paper back |
| Artist | — | Easwari |
| Subject | — | Place names of Tamilnadu in the Tamil Inscriptions. |

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
டி. டி. டி. ஐ. அஞ்சல், சென்னை-600 113

இயக்குநர்
டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்

25—4—1983

# முன்னுரை

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் பல புதிய துறைகளில் நூல்களை வெளியிட்டுக்கொண்டு வருகின்றது. 'தமிழக ஊர்ப் பெயர்கள்' பற்றிய ஆய்வையும் அது செய்து கொண்டிருக்கின்றது. ஊர்ப்பெயர்கள் பற்றிப் பலரும் இதுவரை ஆய்வு செய்து உள்ளனர் இன்னும் முழு நிலையில் தமிழக ஊர்ப்பெயர்கள் அனைத்தும் ஒரே இடத்தில் கிடைக்கும் நிலை இருப்பதாகத் தெரியவில்லை. சமீபத்தில் 'கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள்' பற்றி திரு. ஆர். ஆளவந்தார் அவர்கள் சில மாதங்களாக ஆய்வு செய்து வருகின்றார்கள் அதன் பயனை உலகிற்குத் தெரிவிக்கலாம் என்ற நிலையில் அதைத் தற்போது வெளியிடுகிறோம்.

திரு. ஆர். ஆளவந்தார் அவர்கள் சமீபத்தில் 'தமிழர் தோற் கருவிகள்' என்ற ஒரு நூலை வெளியிட்டார். அதுவும் இத் துறையில் புதிய நூல். நல்ல நூல். சிறந்த வரவேற்பைப் பெற்றுள்ளது.

இதுவரை 'கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள்' பற்றி எந்த வித நூலும் வந்ததாகத் தெரியவில்லை சில கட்டுரைகளும் குறிப்புகளும் வந்திருக்கலாம். அதனால் இந்தப் புது முயற்சியைத் தமிழுலகிற்குத் தருவதில் மகிழ்ச்சி அடைகிறோம். ஆனால் இன்னும் கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள் பற்றி வெளியீட்டு நிலையில் பல நூல்கள் வெளிவர வேண்டும். ஆய்வுக்குப் பல் வழிகளில் இந்த நூல் உதவும் என்று நம்புகிறோம். இந்த நூலைக் கண்ணும் கருத்துமாக நல்ல நிலையில் தயாரித்து அமைத்துள்ள திரு. ஆர். ஆளவந்தார் அவர்களைப் பாராட்டிப் போற்றுகிறேன். இது போன்ற நல்ல பல தமிழர் நூல்களை அவர் தரவேண்டும் என்று விரும்பிக் கேட்டுக்கொள்கிறேன்.

நிறுவனச் செயல்கள் அனைத்திற்கும் ஊக்கமும் ஆக்கமும் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்களுக்கு எங்கள் அன்பான நன்றியையும் வணக்கத்தையும் எப்போதும் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

அன்புள்ள,

ச. வே. சுப்பிரமணியன்

# நன்றியுரை

ஊர்ப் பெயர்கள் பற்றிய ஆய்வினால் சமுதாயம் அடையும் பயன் பெரிது. இதை அனைத்துலகும் புரிந்து செயல்பட்டு வரும் இக்காலக் கட்டத்தில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் ஊர்ப் பெயர்கள் பற்றிய ஆய்வுப் பணியை நடத்தி வருகிறது. தமிழக ஊர்ப்பெயர்கள் அனைத்தையும் மாவட்ட வாரியாக ஆய்ந்து வெளியிடும் திட்டத்தின் தொடக்க நிலையாக இந்நூல் வெளி வருகிறது. கல்வெட்டுகள் வழி தெரிய வரும் ஊர்ப்பெயர்கள் உணர்த்தும் செய்திகள் இந்நூலினுள் இடம் பெற்றுள்ளன.

நல்ல பல திட்டங்களை அமைத்துச் செயல்படுத்துவதன் மூலம் தமிழுக்குத் தொண்டு புரிவதையே தன் வாழ்வின் குறிக் கோளாகக் கொண்டிருக்கும் நிறுவன இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் இந்நூலை உருவாக்கி வெளி யிடும் வாய்ப்பை எனக்குத் தந்தமைக்கு என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூல் உருவாகுங்கால் தம் கருத்துகளைத் தந்து துணை புரிந்த நண்பர்கள் அனைவர்க்கும் நன்றி. இந்நூலைச் சிறப்புற அச்சிட்டுத் தந்த நாவல் அச்சகத்தார்க்கும் நன்றி.

ஆர். ஆளவந்தார்

# பொருளடக்கம்

# 1. ஊர்ப்பெயரும் கல்வெட்டும்

ஒரு பொருளை, ஒரு மனிதனை, ஓரிடத்தைக் குறிக்க எழுந்த குறியீடே பெயர்கள். பொருளையோ அல்லது மனிதனையோ தனித்தறியத் தனிப் பெயர்கள்அமைந்தன போன்று, ஓரிடத்தைப் பிற இடங்களினின்றும் பிரித்தறியத் தோன்றியன இடப்பெயர்கள்.

இடப்பெயர்கள் அல்லது ஊர்ப்பெயர்கள் மிகப் பழமை வாய்ந்தவை. 'மனித இனம் ஓரிடத்தில் நிலைத்து வாழத் தொடங்கிய காலத்திலேயே இடப்பெயர்களும் தோற்றுவிக்கப் பெற்றிருத்தல் வேண்டும்'[1] என்ற கருத்து இவண் சுட்டத் தக்கது. இப்பெயர்களின் தோற்றம் ஆய்வு செய்து அல்லது காரணம் கருதிய நிலையில் முதலில் தோற்றுவிக்கப்படவில்லை. 'தனித் திறமை எதுவுமின்றித் தன்னிச்சையாய்த் தோன்றின'[2] என்ற எண்ணப்படி ஊர்ப்பெயர்கள் காட்சி தருகின்றன. மக்கள் தாங்கள் வாழ்ந்த இயற்கை அமைப்பு, சுற்றுப்புறச்சூழல் போன்ற வற்றைக் கொண்டு இயல்பாகப் பெயர் அமைத்த நிலையே முதலில் தோற்றம் பெற்றது. பின்னர் செயற்கைப் பொருட்களின் வளர்ச்சியில் பல பெயர்கள் உருவாக்கம் பெறத் தொடங்கு கின்றன. இன்று நாம் அறியக்கூடும் பல பெயர்கள் இயற்கைப் பெயர்களாக அமையினும், அவற்றுள் மிகுதியும் மரபாகப் பயின்று வரும் தன்மையையே காண்கின்றோம். இன்றைய நிலை யில் செயற்கைப் பெயர்களே மிகுதியான நகர், இடங்கள், ஊர்கள் போன்றவற்றிற்குச் சூட்டப்படுதல் வழக்கமாக உள்ளது.

---

1. Place Names of Coimbatore District, K. Nachimuthu
2. " "

**ஊர்ப்பெயரின் சிறப்பு :** வரலாற்றை அறிய உதவும் மூலங்களுள் ஊர்ப் பெயராய்வும் ஒன்று. காலந்தோறும் தொடர்ந்து வரும் ஊர்ப் பெயர்கள் அந்தந்தக் கால மக்கள் வாழ்வியலை நாம் அறிந்து கொள்ளப் பெரும் பயனாக அமைகிறது. மேலும் 'ஒரு நாட்டின் பழங்கால வரலாற்றையோ, பண்பாட்டையோ, அறிந்து கொள்ள இலக்கியங்கள், சாசனங்கள், பழங்காசுகள், பிறநினைவுச் சின்னங்கள் எந்த அளவு துணைபுரிகின்றனவோ அந்த அளவு துணைபுரியும் தன்மையும் பெருமையும் ஊர்ப் பெயர்களுக்கும் உண்டு. ஆகவேதான் ஊர்ப்பெயர்கள் பழமையின் எச்சங்கள் என்று கூறப்படுகின்றன.'[3] மேலும் நினைவுச் சின்னங்களோ அல்லது புதைபொருள்களோ ஒரு குறிப்பிட்ட காலத்தை மட்டுமே அறியத் துணைபுரிவன. ஆனால் பெயர்களோ குறிப்பாக ஊர்ப்பெயர்களோ மனித வரலாற்றின் ஒருசில செய்திகளை நமக்கு உணர்த்தித் துணைபுரிகின்றன. "பெயர்களை ஒரு வகையில் புதைபொருட்களுக்கு ஒப்பானவை என்றும் கூறலாம். புதைபொருட்களைப் போலவே பெயர்களும் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே வழக்கிலிருந்து வந்திருக்கின்றன. ஆகையால் புதைபொருட்களைப் போலவே வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தைப் பற்றிக் கூறும் தன்மையன பெயர்கள்"[4] என்று கூறல் மிகையாகாது.

இடப்பெயராய்வின் மூலம் நாம் அறியும் செய்திகள் நமது வரலாற்று, பண்பாட்டு, மொழியியல் துறைகளைப் பற்றிய ஆய்வுக்குப் பெரிதும் துணை செய்வதோடு இடப் பெயராய்வு இல்லையானால் வரலாறு, பண்பாடு, மொழியியல் பற்றிய ஆய்வுகள் முழுமையடைந்தனவாகக் கருத முடியாத நிலையில் இடப் பெயராய்வு அமைகின்றது.

இத்தகைய பெருஞ் சிறப்பும் வரலாற்று முக்கியத்துவமும் கொண்ட ஊர்ப்பெயர்களை ஆய்வு செய்யும் எண்ணம் பிற நாட்டைப் போன்று நம் நாட்டில் செழித்தோங்கவில்லையெனினும், இன்று ஊர்ப் பெயர்கள் பற்றித் தொடங்கியுள்ள ஆய்வு விழிப்புணர்ச்சி விரைவில் இவ்வாய்வு நம் நாட்டிலும் சிறக்கப் போவது உறுதி என்பதைக் கோடிட்டுக் காட்டுகிறது. தமிழ்

---

3. பேரும் பெருமையும், மா. நயினார்
4. திருநெல்வேலிமாவட்ட இடப்பெயராய்வு, ஆ. சுப்பிரமணியன்

நாட்டு ஊர்ப்பெயர்கள் பற்றிய ஆய்வு நிலையில் கி. நாச்சிமுத்து வின் கோயம்புத்தூர் மாவட்ட இடப்பெயராய்வு, எஸ். ஞான முத்துவின் கன்னியாகுமரி மாவட்ட ஊர்ப்பெயராய்வு, மா. நயினாரின் சுசீந்திரம் கல்வெட்டுகளில் இடப்பெயராய்வு, ஆ. சுப்பிரமணியனின் திருநெல்வேலி மாவட்ட இடப்பெயராய்வு போன்றனவும், மதுரைப் பல்கலைக் கழகத்தினரின் நாகர்கோயில் நகராட்சி ஊர்ப்பெயராய்வு, பல ஊராட்சி ஒன்றியங்களின் ஊர்ப் பெயராய்வு போன்றனவும் முன்னோடியாக அமைகின்றன. இன்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் மேற்கொள்ளப்பட்டு வரும் தமிழ்நாட்டு ஊர்ப்பெயர்கள் பற்றிய ஆய்வும், தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம் செயல்படுத்தி வரும் தமிழக ஊர்ப் பெயராய்வும் இவண் எடுத்தியம்பத் தக்கவை.

இத்தகைய ஊர்ப்பெயர் பற்றிய கல்விக்கு நமக்கு உறுதுணை யாவன பல மூலங்கள், இலக்கியங்கள், சாசனங்கள், நாணயங்கள், பிற நாட்டார் குறிப்புகள் போன்றனவற்றுள் கல்வெட்டின் பயன் மிகப் பெரியது.

'நல்லவர் ஒருவர்க்குச் செய்த உபகாரம் கல்மேல் எழுத்துப் போல் காணும். அல்லாத ஈரமில்லாத நெஞ்சத்தார்க்குச் செய்த உபகாரம் நீர்மேல் எழுத்திற்கு நேர்' என்ற நிலையில் சுட்டப் படும் கல்மேல் எழுத்தின், கல்வெட்டின் முக்கியத்துவத்தை, அதன் நிலைபேற்றை, அது தரும் செய்திகளைக் கல்வெட்டு பற்றிய ஆய்வு சிறப்பாக வெளிக் கொணர்கிறது.

பல்லவராட்சி தொடங்கியதன் பின்னரே கல்வெட்டுகள் பெரும்பாலும் தோன்றின என அறிஞர்கள் கருதினாலும், கல்லில் எழுதும் வழக்கம் மிகப்பண்டைக் காலத்தது. போரில் புறங்காட் டாது வீரச்செயல் புரிந்து மாண்ட வீரனுக்குக் கல் நடுதல் உண்டு என்ற பழைய மரபைத் தொல்காப்பியம்,

> ''காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
> சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல்''

என்று புறத்திணையியலில் உரைக்கிறது. இதனைத் தவிர புற நானூறு, அகநானூறு போன்ற சங்க இலக்கியங்களும், திருக்குறள் போன்ற அறநூலும், புறப்பொருள் வெண்பாமாலை போனற பிற இலக்கண நூலும் கல் நாட்டிய தன்மையைப் பேசுகின்றன.

> ''அணி மயிற்பீலி சூட்டிப் பெயர் பொறித்து
> இனி நட்டனரே கல்லும்''

என்பது புறநானூறு தரும் செய்தி.

''என்னை முன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கல் நின்றிவர்''

என்று திருக்குறள் கூறுகிறது.

புறப்பொருள் வெண்பாமாலையும். ''அவன் பெயர் கல்மிசை பொறித்து கவின்பெற கல் நாட்டின்று'' என நடுகல் பற்றிய செய்தியைத் தருகிறது. இக்கருத்தினைக் காணும் பொழுது முதலில் கல் நடுதல் வீரத்தைச் சுட்டுவதற்காக என்பது தெளிவுபடுகிறது. அகநானூறு ''பெயரும் பீடும் எழுதி அதர்தொறும் பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்''லினைச் சுட்டும் நிலை, நடுகற்களில் வீரர்களின் பெயரையும் சிறப்பையும் எழுதி வைத்தனர் என்பதையும் அறிகின்றோம். இத்தகைய நிலையின் பெரியதொரு வளர்ச்சியாக அமைகின்றன பின் தோன்றிய கல்வெட்டுகள். வீரர்களின் பெயரும் சிறப்பும் குறிப்பதுடன் மேலும் பல செய்திகளையும், உயர்ந்தோரின் சிறப்புகளையும் எல்லோரும் அறியும்படி செய்ய வேண்டும் என்ற நோக்கமே இவ்வளர்ச்சிக்குரிய காரணமாகச் சுட்டலாம். இவ்வாறு செய்திகள் பல இடம் பெறத் துவங்கியதன் காரணமாக மக்கள் வாழ்வில் பெரும்பங்கும், முக்கியத்துவமும் பெற்றிருந்த ஊர்ப் பெயர்களும் இயல்பாக அவண் இடம் பெறத் துவங்குகின்றன. இவ்வாறு கல்வெட்டில் இடம் பெறும் ஊர்ப் பெயர்களை எந்தெந்த முறையில் அவண் தோற்றம் பெறுகின்றன என்பதைச் சில பகுதிகளாகப் பிரித்துக் காணலாம்.

1. சாதாரணமாக ஓரிடத்தைச் சுட்டும் பொழுது அந்த ஊர்ப் பெயரைச் சுட்டும் தன்மை.

2. அரசியல் நிலையில் ஊர்ப்பெயர்கள் குறிப்பிடப்படல். அதாவது, ஒரு நாட்டை வெல்லும் அரசன் தன்னுடைய வெற்றியை அல்லது வீரத்தைப் பறைசாற்றும் முறையில் வென்ற ஊருக்குத் தன் பெயரை அல்லது தனக்கு விருப்பப்பட்ட பெயரை வைத்தல். இச்சமயத்தில் வென்ற ஊரின் பெயரும், மாற்றப்பட்ட பெயரும் நமக்குத் தெரிய வருகின்றன.

3. அரசர்கள் அல்லது பிறர் தானம் கொடுத்தல் அல்லது அறம் செய்தல் போன்ற சமயங்களில் ஊரைக் கொடுத்தல் அல்லது ஊருக்குக் கொடுத்தல் என்னும் நிலையில் ஊர்ப் பெயர்கள் வெளிப்படுகின்றன.

4. அரசன் அல்லது மக்களைத் தனித்துச் சுட்ட ஊர்ப் பெயர்களை அவர்கள் பெயர்களுடன் இணைத்தல் மரபு. ஒரு

நாட்டை வெற்றி கொண்ட அரசனை, அந்நாட்டுப் பெயருடன் இணைத்துச் சுட்டல் பல அரசர்களின் வரலாற்று வழி நமக்குத் தெரிய வருகிறது. சான்றாக மதுரை கொண்ட கோப்பரகே சரிவர்மன் போன்ற பெயர்களைச் சுட்டலாம். இதனைப் போன்று ஒரு மனிதனை இனம் சுட்ட அவன் பெயருடன் ஊர்ப்பெயரை இணைத்துச் சுட்டலைப் (விலவூர் தேசத்துக் கணக்கு ஆலன்ரவி) பல கல்வெட்டுச் சான்றுகள் சுட்டுகின்றன.

5. கொடையின் போது ஊர்களை அளித்தலும் உண்டு. அப்பொழுது அளந்து கணக்கிடும் நிலை, அந்த ஊர் இருக்கும் இட அமைப்புப் போன்றவற்றைச் சுட்டும் நிலையிலும் பல ஊர்ப் பெயர்கள் இடம் பெற ஏதுவாகின்றன.

இவ்வாறு கல்வெட்டுகளில் பல நிலைகளில் இடம் பெறுகின்றன ஊர்ப் பெயர்கள். இப்பெயர்கள் பற்றிய ஆழ்ந்த ஆய்வு தன் வரலாற்றுடன் மேலும் பல வரலாறுகளையும் விளக்க வல்லனவாக அமைவதையும் நாம் உணர முடிகிறது. கல்வெட்டுகளில் அமையும் ஊர்ப் பெயர்கள் இலக்கியங்களில் அமையும் ஊர்ப்பெயர்களின்றும் பெறலாகும் பயன்களைக் காட்டிலும் மேலும் சில எண்ணங்களையும் தரவல்லன. கல்வெட்டுகளில் பல ஊர்ப்பெயர்கள் மக்களிடையே வழங்கியவாறே—பேச்சு வழக்கில் வழங்கியவாறே பல உருவங்களுடன் காணப்பெறுகின்றன. இவை மொழியாய்வுக்குரிய அடிப்படையை நமக்குத் தருகின்றன. அடுத்து அரசியல் சூழலில் அரசர்களின் ஆட்சி முறைக்கேற்ப ஊர்ப் பெயர்கள் மாற்றியமைக்கப்பட்ட நிலை தெரியவருகிறது.

இந்நூல் இதுவரையில் வெளிவந்துள்ள தமிழகக் கல்வெட்டுகளில் சுமார் இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட கல்வெட்டு ஊர்ப் பெயர்களை அடிப்படையாகக் கொண்டு ஆய்வு செய்ய முயல்கிறது.

முதலில் ஊர்ப் பெயர்களின் அமைப்பு முறை பற்றிய கட்டுரை அமைகிறது. இதனுள் பெயர்களில் காணப்பெறும் பொதுக் கூறுகள், சிறப்புக் கூறுகள், அவை இயற்கை, செயற்கை முறையில் தோன்றிய நிலை போன்ற சில எண்ணங்கள் விளக்கப்படுகின்றன.

இரண்டாவதாக நிர்வாக அமைப்பு, நிலஅமைப்பு, பட்டங்கள் போன்ற பலவற்றிற்கும் ஏற்பப் பெயர்பெற்ற முறை விளக்கப்படுகிறது.

மூன்றாவதாக அரசியல், பிற மொழியாளர் தொடர்பு போன்ற நிலைகளால் ஏற்பட்ட பெயர் மாற்றங்கள் விளக்கப்படுகின்றன.

இறுதியில் இப்பெயர்கள் வழி நாம் அறியும் சில செய்திகள் சுட்டப்படுகின்றன.

பின்னிணைப்பில் கல்வெட்டில் தொகுத்த ஊர்ப்பெயர்கள் ஒரு இணைப்பாகவும், கல்வெட்டில் காணும் ஊர்ப்பெயர்களில் சிலவற்றைப்பற்றி நாம் அறியும் பிற செய்திகள் மற்றொரு இணைப்பாகவும் கொடுக்கப்படுகின்றன. மூன்றாவது இணைப்பாக ஊர்ப்பெயராய்வு தொடர்பான நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் அடங்கிய பட்டியல் ஒன்றும் இடம் பெறுகிறது.

# 2. ஊர்ப்பெயர்களின் அமைப்புமுறை

கல்வெட்டில் காணப்பெறும் ஊர்ப் பெயர்களில் பல இரண்டே தனிக் கூறுகளைக் கொண்டவையாக சிறிய அளவில் அமைந்துள்ளன.

| | |
|---|---|
| தச்சன் தாங்கல் | திருவல்லம் |
| தட்சைச்சேரி | கஞ்சனூர் |

என்பன போன்ற ஊர்ப் பெயர்கள் இரண்டு தனிக் கூறுகளை மட்டும் கொண்டு சிறிய அளவில் அமைந்தவை.

இரண்டிற்கும் மேற்பட்ட அதிகப்படியான கூறுகளைக் கொண்டு பெரிய, அதாவது நீண்ட அளவில் அமைந்த ஊர்ப் பெயர்களும் சிறுபான்மை உள்ளன.

கிடங்கிலான ராஜேந்திர சோழநல்லூர்

நெடுமணலாகிய மதந மஞ்சரி சதுர்வேதிமங்கலம்

அமனி நாராயணச் சதுர்வேதிமங்கலம்

என்பன போன்ற ஊர்ப்பெயர்கள் இரண்டிற்கும் மேற்பட்ட அதிகப்படியான கூறுகளைக் கொண்டு நீண்ட அளவில் அமைந்தவை.

அநேகமாக ஊர்ப்பெயர்கள் எல்லாம் இரண்டு கூறுகளைக் கொண்டவையாக அமைந்துள்ளன. ஒன்று பொதுக் கூறு. மற்றொன்று சிறப்புக்கூறு.

பொதுக் கூறு என்பது ஊர்ப் பெயரின் விகுதியாக அமைந்திருப்பது. இக்கூறு பல ஊர்களுக்குப் பொதுவானதாக இருக்கும். இந்த விகுதியே, அதாவது பொதுக் கூறே ஆரம்ப காலத்தில் ஊரைக் குறிக்கும் பெயராகத் தோன்றியிருக்க வேண்டும். சிறப்புக் கூறு என்பது ஊர்ப் பெயரின் முதல் பகுதி

யாக அமைந்திருப்பது. ஒரு ஊரின் தன்மை அல்லது சிறப்புக் குறித்து இந்தப் பொதுக் கூறுகள் அவற்றின் பெயராக முதலில் தோன்றிய பின்னர் பல ஊர்களை ஒரே பொதுக்கூறு சுட்டும் நிலை ஏற்படும் பொழுது அந்த ஊர்களைத் தனித் தனியே பிரித்து உணரச் சிறப்புக் கூறுகள் தோன்றியிருக்க வேண்டும். இந்த வகையில் சிறப்புக் கூறுகள் ஊர்களைத் தனித் தனியே பிரித்து உணர்த்தும் பொழுது, அவற்றின் விகுதியாக அமைந்துள்ள பொதுக் கூறுகள் சிறப்பிழந்து வெறும் சாதாரண நிலையில் அமைகின்றன.

## பொதுக்கூறு

கல்வெட்டுகளில் வரும் ஊர்ப்பெயர்களில்

| | | |
|---|---|---|
| 1. அகம் | 26. காவல் | 51. சமுத்திரம் |
| 2. அகரம் | 27. கானம் | 52. சாத்து |
| 3. அடி | 28. கிராமம் | 53. சாலை |
| 4. அம்பலம் | 29. கிரி | 54. சீர்மை |
| 5. அரங்கம் | 30. குடி | 55. சுரம் |
| 6. அறை | 31. குடை | 56. சுழி |
| 7. ஆகடம் | 32. குப்பம் | 57. சுனை |
| 8. ஆடி | 33. குப்பை | 58. சூழ் |
| 9. ஆணி | 34. குழி | 59. சேரி |
| 10. ஆலம் | 35. குளம் | 60. சோலை |
| 11. ஆறு | 36. குறிச்சி | 61. ஞாயில் |
| 12. இருக்கை | 37. குறுச்சி | 62. தங்கால் |
| 13. இல் | 38. குறும்பு | 63. தண்டலம் |
| 14. ஈசுரம் | 39. குன்றம் | 64. தளம் |
| 15. ஈஸ்வரம் | 40. கூற்றம் | 65. தாங்கல் |
| 16. ஊர் | 41. கேணி | 66. தாங்கி |
| 17. ஏரி | 42. கொடி | 67. தானம் |
| 18. கடல் | 43. கொண்டை | 68. திட்டை |
| 19 கரை | 44. கோட்டம் | 69. துருத்தி |
| 20. கழி | 45. கோட்டை | 70. துறை |
| 21. களம் | 46. கோடு | 71. தூணி |
| 22. கா | 47. கோணம் | 72. தேசம் |
| 23. காடு | 48. கோப்பு | 73. தோட்டம் |
| 24. காரணை | 49. கோயில் | 74. நகர் |
| 25. காரை | 50. சதுர்வேதி மங்கலம் | 75. நகரம் |

76. நகரி
77. நத்தம்
78. நல்லூர்
79. நாடு
80. நாயகம்
81. பட்டணம்
82. பட்டி
83. பட்டிநம்
84. பட்டு
85. பந்தல்
86. பழநம்
87. பள்ளம்
88. பள்ளி
89. பற்று
90. பாக்கம்
91. பாகம்
92. பாகல்
93. பாடி
94. பாலை
95. பாழ்
96. பாளையம்
97. பாறை
98. பிறை
99. புரம்
100. புரி
101. புலம்
102. புவனம்
103. பூண்டி
104. பேட்டை
105. பேடு
106. பேறு
107. மங்கலம்
108. மடம்
109. மடை
110. மருது
111. மலை
112. மா
113. மாடம்
114. மாணிக்கம்
115. மிழலை
116. முட்டம்
117. முடி
118. முளை
119. மூக்கு
120. மேடு
121. வணை
122. வயல்
123. வல்லம்
124. வல்லி
125. வலம்
126. வளநாடு
127. வனம்
128. வாசல்
129. வாடி
130. வாயில்
131. வாரம்
132. விண்ணகர்
133. விளாகம்
134. வீடு
135. வெண்மணி
136. வேலி
137. வைகல்

என நூற்றுமுப்பத்தேழு பொதுக் கூறுகள் அமைந்துள்ளன.

ஊர்ப் பெயர்களில் பொதுக் கூறாக அமையும் பின் ஒட்டு, ஒரே ஒரு பொதுக் கூறு பெற்றுத் தனியாகவும், ஒன்றற்கு மேற்பட்ட பொதுக் கூறுகள் பெற்றுத் தொகையாகவும் அமைந்துள்ளன. தனியாக அமைந்த பொதுக் கூறு தனிப் பொதுக் கூறு என்றும், அவ்வாறின்றி ஒன்றற்கு மேற்பட்டுத் தொகையாக அமைந்த பொதுக்கூறு தொகைப் பொதுக்கூறு என்றும் இடப் பெயராய்வாளர்களால் சுட்டப் பெறுகின்றன. இந்த அடிப்படையில் கல்வெட்டு ஊர்ப் பெயர்களையும் தனிப் பொதுக் கூறுகள் பெற்றவை என்றும், தொகைப் பொதுக் கூறுகள் பெற்றவை என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

தனிப்பொதுக் கூறுகள் கொண்ட ஊர்ப்பெயர்கள்:-இந்த அமைப்பு வகையில் ஊர், குடி, குன்றம், சேரி, பாக்கம், பாடி, புரம், மங்கலம் போன்ற தனிப் பொதுக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்களைக் கூறலாம்.

ஊர்—மண்ணூர்
குடி—கள்ளக்குடி
குன்றம்—திருமுதுகுன்றம்
சேரி—கீழைச்சேரி
பாக்கம்—விளப்பாக்கம்
பாடி—வேசாலிப்பாடி
புரம்—அனபாயபுரம்
மங்கலம்—சேந்தமங்கலம்

தொகைப் பொதுக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள்:—இந்த அமைப்பு வகையில் காட்டுக் கோட்டம், குருந்தம் பாக்கம், சதுர் வேதிமங்கலம், சேந்தன்குடி, சோழச்சேரி, தேவபுரம், நல்லூர், முல்லைப்பாடி, வளநாடு, விண்ணகர் போன்ற தொகைப் பொதுக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்களைக் கூறலாம்.

காட்டுக் கோட்டம்—ஊற்றுக்காட்டுக் கோட்டம்
குருந்தம் பாக்கம்—கண்குருந்தம்பாக்கம்
சதுர்வேதிமங்கலம்-வானவன்மாதேவிசதுர்வேதி மங்கலம்
சேந்தன்குடி—கமுகஞ் சேந்தன்குடி
சோழச்சேரி—இருமுடி சோழச்சேரி
தேவபுரம்—அருமொழி தேவபுரம்
நல்லூர்—ஸ்ரீபத்மனாப நல்லூர்
முல்லைப்பாடி—ஐஞ்சூர் முல்லைப்பாடி
வளநாடு—சிங்கபுர வளநாடு
விண்ணகர்—முடிகொண்ட சோழவிண்ணகர்

இடப்பெயராய்வாளர்கள் பொதுக் கூறுகளை இயற்கை அமைப்பு, செயற்கை அமைப்பு, குடியிருப்பு ஆகிய மூன்று அடிப் படையில் அமைந்தவைகளாகக் காணுகின்றனர். கல்வெட்டில் காணும் ஊர்ப் பெயர்களில் அமைந்த பொதுக் கூறுகளையும் அவர்கள் நோக்கில் காணுவோம்.

இயற்கை யமைப்பு அடிப்படையில் பொதுக் கூறுகளைக் கொண்ட ஊர்ப் பெயர்கள்:—

இயற்கை யமைப்பு அடிப்படையில் அமைந்த பொதுக் கூறுகள் நில அமைப்பு, நீர்நிலை, தாவரம், இவற்றில் அடங் காத பிறவகை எனப் பலவகை அடிப்படையில் அமைந்துள்ளன.

## இயற்கை நில அமைப்பு

குன்றம், கோடு, பாறை, மலை, முடி போன்ற பொதுக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் இவ்வகையில் அமைந்துள்ளன.

குன்றம்—திருமுதுகுன்றம்
கோடு—திருமுதான் கோடு
பாறை—குறிஞ்சிப்பாறை
மலை—சுவாமிமலை
முடி—திருக்கடைமுடி

## இயற்கை நீர்நிலை அமைப்பு

ஆறு, கடல், சமுத்திரம் போன்ற பொதுக் கூறுகளைக் கொண்ட ஊர்ப் பெயர்கள் இவ்வகையில் அமைந்துள்ளன.

ஆறு—கீழ்ப்பழையாறு
கடல்—திருப்பாற்கடல்
சமுத்திரம்—சின்ன மாம்பாசமுத்திரம்

## இயற்கைத் தாவரத்தின் பெயர் அமைப்பு

காடு, மருது, தண்டலம், வனம் போன்ற பொதுக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் இவ்வகையில் அமைந்துள்ளன.

காடு—திருப்பனங்காடு
மருது—திருவிடை மருது
தண்டலம்—பெருந்தண்டலம்
வனம்—தில்லைவனம்

திருமருகல்—என்ற ஊர்ப்பெயரின் பொதுக் கூறாகிய மருகல் என்பது தாவரத்தின் பெயர். மருகல் என்பது ஒவ்வகை வாழை. கருங்கல் தளத்திலேயே வளர்வதால் இதைக் 'கல்வாழை' என்றும் வழங்குவர். இதன் பழத்தை இறைவனுக்கு வைக்கலாமேயன்றி உண்ணலாகாது. இப்பழத்தை உண்டால் துன்பம் வரும் என்ற ஒரு நம்பிக்கை உலவுகிறது. இந்த வாழை இந்த ஊரின் மரமாதலால் திருமருகல் என்று இவ்வூர் பெயர் பெற்றது என்பர். இவ்வூரிலுள்ள கோயில் கோச்செங்கட் சோழனால் கட்டப்பட்டது என்பர்[1]

---

1. டாக்டர் இரா. கலைக்கோவன்

## இயற்கை: பிறவகைப் பெயர்கள் அமைப்பு

கோணம் பிறை போன்ற பொதுக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்களை இவ்வகையில் அமைக்கலாம்.

கோணம்—நயினார் கோணம்
பிறை—திருநெடும்பிறை

செயற்கை யமைப்பு அடிப்படையில் பொதுக் கூறுகளைக்கொண்ட ஊர்ப் பெயர்கள்:—

செயற்கை அமைப்பு அடிப்படையில் அமைந்த பொதுக் கூறுகளும் நில அமைப்பு, நீர்நிலை, பிறவகை எனப் பலவகை அடிப்படையில் அமைந்துள்ளன.

## செயற்கை நில அமைப்பு

அம்பலம், குழி, கோட்டை, கோயில், சாலை, மேடு, வாசல் போன்ற பொதுக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் இவ்வகையில் அமைந்துள்ளன.

அம்பலம்—மணியம்பலம்
குழி—திருமாணிக்குழி
கோட்டை—பெரிய கோட்டை
கோயில்—சூரிய நாயனார் கோயில்
சாலை—பாறைச்சாலை
மேடு—புலித்தலை மேடு
வாசல்—திருப்புனவாசல்

## செயற்கை நீர்நிலை அமைப்பு

ஏரி, குளம், துறை போன்ற பொதுக்கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் இவ்வகையில் அமைந்துள்ளன.

ஏரி—புத்தேரி
குளம்—பெரியகுளம்
துறை –திருமயிலாடுதுறை

## செயற்கை: பிறவகைப் பெயர்கள் அமைப்பு

சிலை, தூணி, பந்தல், பாகம் போன்ற பொதுக்கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் இவ்வகையில் அமைந்துள்ளன.

சிலை—விரையாச்சிலை
தூணி—இடையன் தூணி
பந்தல்—வாழைப்பந்தல்
பாகம்—திருப்பன்றபாகம்

## குடியிருப்புப் பெயர்கள் அமைப்பு

குறிச்சி, சாத்து, தேசம், பட்டி, பட்டினம், பள்ளி, பேட்டை, மடம், விளாகம் போன்ற பொதுக்கூறுகளைக் கொண்ட ஊர்ப் பெயர்கள் இவ்வகையில் அமைந்துள்ளன.

குறிச்சி—முத்தலைக் குறிச்சி
சாத்து—வெண்குடிச்சாத்து
தேசம்— பெருங்குழி தேசம்
பட்டி—திருவான் பட்டி
பட்டினம்— குலசேகரப்பட்டினம்
பள்ளி— சரப்பள்ளி
பேட்டை—மும்முடிசோழப் பேட்டை
மடம்—செயங்கொண்டான் மடம்
விளாகம்—பனைந்தார் விளாகம்

## சிறப்புக்கூறு

ஊர்ப்பெயர்கள் அமைப்பில் சிறப்புக்கூறு முன் ஒட்டாக அமையும். பொதுக்கூறு போலவே சிறப்புக்கூறும் ஊர்ப்பெயர் களில் தனியாக ஒரே ஒரு முன் ஒட்டாகவும், ஒன்றற்கு மேற்பட்ட முன் ஒட்டாகவும் அமையும். தனியாக அமைந்த சிறப்புக்கூறு தனிச் சிறப்புக்கூறு என்றும், ஒன்றற்கு மேற்பட்டதாக அமைந்த சிறப்புக் கூறு தொகைச் சிறப்புக் கூறு என்றும் அமையும்.

எருமைப்பட்டி—

தனியாக ஒரே ஒரு சிறப்புக்கூறு பெற்று அமைந்த ஊர்ப்பெயர்

திருநாரையூர்
ஸ்ரீகரிகால கண்ணச்சேரி

திரு, ஸ்ரீபோன்ற அடைகளுடன் சேர்ந்து ஒன்றற்கு மேற்பட்ட சிறப்புக் கூறுகளைப் பெற்று வந்தன.

சிறப்புக்கூறுகளை விளக்கப் பெயர் அடை என்றும், ஆட்பெயர் அடை என்றும், இந்த இரண்டு பிரிவுகளில் அடங்காத பிறவகைப் பெயர் அடை என்றும் வகைப்படுத்துகின்றனர் இடப்பெயராய் வாளர்கள்.

## விளக்கப் பெயர் அடை

விளக்கப்பெயர் அடை என்ற பிரிவில் நிலஅமைப்பு, நீர் நிலைகள், தாவரம், விலங்கு போன்ற இயற்கைக் கூறுகளும்,

தோட்டம், வயல் போன்ற செயற்கைக் கூறுகளும், கீழ், மேல், பெரிய, சிறிய போன்ற ஒப்புமைக் கூறுகளும் அடங்கும்.

நிலஅமைப்பைக் குறிக்கும் சொற்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட விளக்கப் பெயர் அடைகளாகிய சிறப்புக் கூறுகள் அமைந்த ஊர்ப்பெயர்கள்.

கல், குறிஞ்சி, குன்றம், பாறை, மண், மணல், மருதம், மலை, முல்லை போன்ற சிறப்புக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் இவ்வகையில் அடங்கும்.

கல்—கல்குளம்
குறிஞ்சி—குறிஞ்சிப்பாறை
குன்றம்—குன்றத்தூர்
பாறை—பாறைச்சாலை
மண்—மண்ணூர்
மணல்—மணற்பாக்கம்
மருதம்—மருதத்தூர்
மலை—மலையநூர்
முல்லை—முல்லைமங்கலம்

களம், கோட்டை போன்ற நில அமைப்பைக் குறிக்கும் சிறப்புக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்களும் இவ்வகையில் அடங்கலாம்.

களம்—களத்தூர்
கோட்டை—கோட்டையூர்

நீர்நிலைகளைக் குறிக்கும் சொற்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட விளக்கப் பெயர் அடைகளாகிய சிறப்புக் கூறுகள் அமைந்த ஊர்ப்பெயர்கள்;

அருவி, ஆறு, கடல், பரவை போன்ற சிறப்புக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் இவ்வகையில் அடங்கும்.

அருவி—அருவிக்கரை
ஆறு—ஆற்றூர்
கடல்—கடலங்குடி
பரவை—பரவைபுரம்

கயம், குளம், துறை, பொய்கை போன்ற நீர்நிலைகளைக் குறிக்கும் சிறப்புக் கூறுகளைக் கொண்ட ஊர்ப் பெயர்களும் இவ் வகையில் அடங்கும்.

கயம்—கயத்தூர்
குளம்—குளமுக்கு
துறை—துறையூர்
பொய்கை—பொய்கை நல்லூர்

தாவரங்களைக் குறிக்கும் சொற்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட விளக்கப் பெயர் அடைகளாகிய சிறப்புக்கூறுகள் அமைந்த ஊர்ப்பெயர்கள்.

இலுப்பை, காஞ்சி, காரை, தாழை, தில்லை, நாவல், நெல், பாதிரி, புல், புளி, மருது, மா, முருங்கை, வாழை, விள போன்ற சிறப்புக்கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் இவ்வகையில் அடங்கும்.

இலுப்பை—இலுப்பைக்குடி
காஞ்சி—காஞ்சிபுரம்
காரை—காரைக்காடு
தாழை—தாழைக்குடி
தில்லை—தில்லைவனம்
நாவல்—நாவற்குடி
நெல்—நெல்வயல்
பாதிரி—பாதிரிப்புலியூர்
புல்—புல்லூர்
புளி—புளியம்பாக்கம்
மருது—மருதூர்
மா—மாம்பாக்கம்
முருங்கை—முருங்கைப்பாக்கம்
வாழை—வாழைப்பந்தல்
விள—விளப்பாக்கம்

விலங்குகள் போன்றவற்றின் பெயர்களைக் குறிக்கும் சொற்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட விளக்கப்பெயர் அடைகளாகிய சிறப்புக்கூறுகள் அமைந்த ஊர்ப்பெயர்கள்.

ஆனை, எலி, எருமை, கழு, கிளி, குரங்கு, குருகு, சிங்கம், சீயம், நந்தி, நாரை, பன்றி, புள், புலி, மயில் போன்ற சிறப்புக் கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் இவ்வகையில் அடங்கும்.

ஆனை—ஆனைச்சூழ்
எலி—எலிவாரம்

எருமை—எருமைப்பட்டி
கழு—கழுக்குன்றம்
கிளி—கிளிநல்லூர்
குரங்கு—குரங்காடுதுறை
குருகு—குருகாடி
சிங்கம்—சிங்கங்குன்றம்
சீயம்—சீயமங்கலம்
நந்தி—நந்திநல்லூர்
நாரை—நாரையூர்
பன்றி—பன்றியூர்
புள்—புட்குழி
புலி—புலியூர்
மயில்—மயிலாடுதுறை

செயற்கைக் கூறுகளைக் குறிக்கும் சொற்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட விளக்கப்பெயர் அடைகளாகிய சிறப்புக் கூறுகள் அமைந்த ஊர்ப்பெயர்கள்.

செய், பழனம், வயல் போன்ற சிறப்புக்கூறுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் இவ்வகையில் அடங்கும்.

செய்—செய்யூர்
பழனம்—பழனக்குடி
வயல்—வயலூர்

ஒப்புமைக் கூறுகளை விளக்கும் சொற்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட விளக்கப்பெயர் அடைகளாகிய சிறப்புக்கூறுகள் அமைந்த ஊர்ப்பெயர்கள்.

கீழ், மேல், தென், வட, கருமை, செம்மை, சிறு, பெரிய போன்ற ஒப்புமைச் சிறப்புக் கூறுகளைக் கொண்ட ஊர்ப் பெயர்கள் இவ்வகையில் அடங்கும்.

கீழ்—கீழாற்றூர்
மேல்—மேல் வேலூர்
தென்—தென் பனங்காடு
வட—வடசாத்தமங்கலம்
கரும்—கருங்குளம்
செம்—செங்குன்றம்
சிறு—சிறுகுளத்தூர்
பெரிய—பெரியகுளம்

## ஆட்பெயர் அடை

ஆட்பெயர்களைச் சிறப்புக்கூறுகளாகக் கொண்ட ஊர்ப் பெயர்கள் இவ்வகையில் அடங்கும்.

ஆட்களின் இயற்பெயர்களை (மன்னர்களின் இயற்பெயர் உட்பட)ச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட ஊர்ப்பெயர்கள்.

அநபாயன்—அநபாயநல்லூர்
அழகியபாண்டியன்—அழகிய பாண்டியபுரம்
ஆதன்—ஆதனூர்
ஆமது—ஆமது பேட்டை
இரகுநாதன்—இரகுநாதபுரம்
இரணசிங்கன்—இரணசிங்கநல்லூர்
உலகமாதேவி—உலகமாதேவிப்பட்டினம்
ஓரி—ஓரியூர் - (வள்ளல் பெயர்)
கண்ணன்—கண்ணனூர்
கமுகஞ் சேந்தன்—கமுகஞ் சேந்தன் குடி
சிவராமன்—சிவராமப்பேட்டை
சுந்தர சோழன்—சுந்தரசோழபுரம்
வீரபாண்டியன்—வீரபாண்டியநல்லூர்
வேள்குலராமன்—வேள்குலராமன் நல்லூர்

ஆட்களின் பொதுப்பெயர், மன்னனின் பட்டப்பெயர்கள் ஆகியவற்றைச் சிறப்புக்கூறுகளாகக் கொண்ட ஊர்ப்பெயர்கள்.

நங்கை—நங்கைகுளம்
நம்பி—நம்பிகுளம்
அரிகேசரி—அரிகேசரிநல்லூர்
ராஜகேசரி—ராஜகேசரிநல்லூர்

உழவு, மருத்துவம் போன்ற தொழிலைக் குறிக்கும் பெயர்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட ஊர்ப்பெயர்கள்.

உழவு—உழக்குடி
மருத்துவம்—மருத்துவக்குடி

நெசவுத் தொழிலைக் கொண்ட மக்கள் வாழ்ந்த நகரம் ஒன்று சாலியநகரம்[2] என்றே பெயர் பெற்றிருந்ததாக, கி. பி. 1691 ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டு மூலம் தெரிகிறது.

2. கன். கல். தொகுதி 5. கி. பி. 1691. தொ. எ. 1969/80

கடவாய்ச்சேரி என்ற ஒரு ஊரை, தில்லைநாயகநல்லூர் என்று பெயர் வைத்து நகரத்தின் சாலிகர்க்கு (நெசவுத் தொழில் புரிவோர்) குடியிருப்புசத்தமாக ஆக்கித் தந்ததாகக் கோப்பெருஞ் சிங்கதேவனின் கல்வெட்டு ஒன்று கூறுகிறது.[3]

'சேலம்'[4] என்ற ஊர்ப் பெயர்கூட, அவ்வூரில் மிகுதியாக நடை பெற்ற ஆடை நெய்யும் தொழிலால் - அத்தொழில் புரிந்த மக்கள் மிகுதியாக வசித்ததால் பெற்ற பெயர் என்று தெரிகிறது.

சேலம் என்றால் மகளிர் அணியும் ஆடை எனப் பொருள். கொங்குவேளிர் தான் இயற்றிய பெருங்கதையில் பந்தடி கண்டது என்ற காதையில் ''சேலம் திருத்தி''—எனக் கூறியிருக்கிறார். அந்நூலைப் பதிப்பித்த டாக்டர் உ. வே சாமிநாதையர் அந் நூலின் அடிக்குறிப்பில் சேலம் என்றால் சேலை, மகளிர் அணியும் ஆடை எனக் கூறியிருக்கிறார். மகளிர் அணியும் பலவண்ணச் சேலைகளை உருவாக்கிய ஊரே அது. ஆடையை உருவாக்கும் தொழில் சிறப்பாலேயே அந்த ஊர் சேலம் எனப் பெயர் பெற்ற தாகத் தெரிகிறது[5] சிறப்புக் கூறு மட்டுமே ஊர்ப்பெயராக அமைந்த பல பெயர்களில் இப்பெயரும் ஒன்று.

இடையன், கருமாரன், தச்சன், வண்ணான் போன்ற சாதிப் பெயர்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட ஊர்ப் பெயர்கள்.

இடையன்—இடையன் தூணி
கருமாரன்—கருமாரச்சேரி
தச்சன்—தச்சன் தாங்கல்
வண்ணான்—வண்ணாரக் கொல்லை
வண்ணாரப் பாறை.

ராவுத்தன் என்ற சாதிப்பெயரைச் சிறப்புக் கூறாகக்கொண்ட ஊர்ப் பெயர்.

ராவுத்தன்— ராவுத்தநல்லூர்

## பிறவகைப் பெயர் அடை

மேற்கூறிய இரண்டு வகையிலும் அடங்காத பிறவகைப் பெயர்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட ஊர்ப் பெயர்கள் இவ்வகையில் அடங்கும்.

---

3. S.I.I. Vol. XII No. 154
4. S I I. Vol IV No. 152
5. கட்டுரை S.Velusamy, B. Lit., Chennimalai.

கடவுளர் பெயர்களை (சிறு தேவதைகள் உட்பட)ச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட ஊர்ப் பெயர்கள்.

இயமன்—இயமனிசுரம்
இறை—இறையானூர்
சுவாமி—சுவாமி மலை
பிரமன்—பிரமபுரம்
பெடாரி—பெடாரியூர்
ஸ்ரீபத்மனாபன்—ஸ்ரீபத்மனாப நல்லூர்

இதுவரையில் கூறாத பிறவகைப் பெயர்களைச் சிறப்புக் கூறுகளாகக் கொண்ட ஊர்ப் பெயர்கள்.

ஆடை—ஆடையூர்
கப்பல்—கப்பலூர்
சித்திரமேழி—சித்திரமேழி நல்லூர்
பிறை –பிறையூர்
பொன்—பொன் பரப்பின நல்லூர்
மண்டை—மண்டையூர்
மழை—மழையூர்
சோறு—சோற்றுப் பாலை
திருச்சோற்றுத் துறை
பணியாரம்—திருப்பணியார புரம்
பால்—திருப்பாற்கடல்
பொரி —திருப்பொரியூர்
வெண்ணெய்—திருவெண்ணெய் நல்லூர்
பெருங்காயம்—பெருங்காய நல்லூர்

சோறு, பணியாரம, பால்,பொரி, வெண்ணெய், பெருங்காயம் ஆகிய சிறப்புக் கூறுகள் உணவுப் பொருட்களின் பெயர்கள் ஆகும்.

மேற்கூறிய வகையில் பொதுக் கூறுகளையும், சிறப்புக் கூறுகளையும் கொண்ட ஊர்ப் பெயர்கள் தமிழ்க் கல்வெட்டில் இடம் பெற்றுள்ள உண்மையை மேற்கோளாகக் காட்டப்பட்ட ஊர்ப் பெயர்கள் மூலம் உணர்ந்து கொள்ளலாம். அத்தகைய ஊர்ப் பெயர்கள் இடம் பெற்ற கல்வெட்டின் விரிவான விவரங்களை இணைப்புப் பட்டியல் மூலம் உணரலாம்.

# 3. ஊர்ப்பெயர்கள் பெயர் பெற்ற முறைகளில் சில

தன்னிடம் அமைந்த நிலங்களின் தன்மையால் நான்கு வகையான அமைப்பைக் கொண்டிருந்தது தமிழகம். மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி என்னும் வகையாகவும், காடும் காடு சார்ந்த இடமும் முல்லை என்னும் வகையாகவும், வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் என்னும் வகையாகவும், கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் என்னும் வகையாகவும் பெயர் பெற்று விளங்கியது. காலப்போக்கில் பாலைவனமும் ஒரு தனி வகையான அமைப்பாக அமைந்து பாலை என்னும் பெயர் பெற்றது. இவ் வகையான பெயர்களைத் தம்முள் அடக்கி ஊர்கள் பெயர் பெற்றிருந்தமை கல்வெட்டில் காணும் ஊர்ப் பெயர்கள் மூலம் தெரிகிறது.

குறிஞ்சி—குறிஞ்சிப் பாறை
முல்லை—முல்லை மங்கலம்
மருதம்—மருதத்தூர்
நெய்தல்—நெய்தல் வாயில்
பாலை—சிறு பாலையூர்

மேலும் ஊர்ப் பெயர்களின் இறுதிப் பகுதியாகிய பின் ஒட்டைக் கொண்டு அந்த ஊர் எந்த வகை நிலப்பகுதியைச் சேர்ந்தது என்றும் அறியும் வகையில் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன. அதாவது குறிஞ்சி நில ஊர்ப்பெயரா, முல்லை நில ஊர்ப்பெயரா, மருத நில ஊர்ப்பெயரா, நெய்தல் நில ஊர்ப் பெயரா மற்றும் பாலை நில ஊர்ப்பெயரா என்றெல்லாம் அறியும் வகையில் அமைந்துள்ளன.

குறிஞ்சி நில ஊர்ப்பெயராயின் குறிச்சி, குன்றம், கோடு, பாறை, மலை போன்ற சொற்கூறுகளைக்கொண்டு முடியும் பெயர்களாக இருந்தன.

குறிச்சி—முத்தலைக் குறிச்சி
குன்றம்—திருக்கழுக்குன்றம்
கோடு—திருமுதான்கோடு
பாறை – குறிஞ்சிப்பாறை
மலை —திருவண்ணாமலை

முல்லை நில ஊர்ப்பெயராயின் காடு, பட்டி, பாடி, வனம் போன்ற சொற்கூறுகளைக் கொண்டு முடியும் பெயர்களாக இருந்தன.

காடு—காரைக் காடு
பட்டி—திருவான்பட்டி
பாடி—வேசாலிப்பாடி
வனம்—தில்லைவனம்

நெய்தல் நில ஊர்ப்பெயராயின் பட்டினம், பாக்கம் போன்ற சொற்கூறுகளைக் கொண்டு முடியும் பெயர்களாக இருந்தன.

பட்டினம்—குலசேகரப்பட்டினம்
பாக்கம்— வளப்பாக்கம்

மருதநில ஊர்ப்பெயராயின் கா, குடி, சேரி, புரம், புரி, வயல் போன்ற சொற்கூறுகளைக் கொண்டு முடியும் பெயர்களாக இருந்தன.

கா—திருவானைக்கா
குடி—திருவேழ்விக்குடி
சேரி—கீழைச்சேரி
புரம்—அநபாயபுரம்
புரி—சிவபுரி, வடபுரி
வயல்—புல்வயல், வேட்டை வயல்

பாலை நில ஊர்ப்பெயராயின் பெரும்பாலும் குறும்பு போன்ற சொற்கூறு கொண்டு முடியும் பெயராக இருந்தது.

குறும்பு—முள்ளிக் குறும்பு

ஒரு வகை நிலத்தில் வாழ்ந்த மக்கள் வேறு வகை நிலங்களில் குடியேறியதுண்டு. அப்படிக் குடியேறியவர்கள் தாம் முன்பு வாழ்ந்த ஊர்ப் பெயர்களையே தாம் போய்க் குடியேறியமைத்த

குடியிருப்புகளாகிய ஊர்களுக்கும் இடும் வாய்ப்பு இருந்தமையாலும், நிலத்தின் இயல்புகள் மாற்றம் அடைந்து ஒருவகை நிலம் மற்றொரு வகை நிலமாக மாறும் வாய்ப்பு இருந்தமையாலும் மேற்கூறிய பெயர் வகைகளில் அமைப்பில் காலப்போக்கில் மாற்றம் ஏற்பட்டிருக்கலாம்.

## நிர்வாகப் பிரிவுகள்

நாட்டு நிர்வாக அடிப்படையில் நாடு, வளநாடு, கோட்டம், கூற்றம், மண்டலம் போன்று பல பிரிவுகளாக நாடு பிரிக்கப் பட்டிருந்திருக்கிறது. இத்தகைய பிரிவுகள் குறிப்பிட்ட நிலப் பரப்பைத் தம்முள் அடக்கிக்கொண்டு இருந்தாலும் மன்னர்களின் ஆட்சி மாற்றங்களில் இந்தப் பிரிவுகளுக்குள் அடங்கிய நிலப் பரப்பும் மாற்றம் அடைந்துள்ளது. ஒரு மன்னனுடைய ஆட்சியில் குறிப்பிட்ட நாடு, வளநாடு, கோட்டம், கூற்றம் என்ற பிரிவுகளில் அடங்கிய நிலப்பரப்பு மற்றொரு மன்னனுடைய ஆட்சியில் வேறொரு நாட்டில், வளநாட்டில், கோட்டத்தில், கூற்றத்தில் மாற்றம் அடைந்து கூடியோ குறைந்தோ மற்றொரு நிர்வாகப் பிரிவில் இடம் பெற்றோ இருந்திருக்கிறது. இந்த வகை மாறுதல் களால் ஒரு ஆட்சிக்காலத்தில் ஒரு நாட்டில், வளநாட்டில், கோட்டத்தில், கூற்றத்தில் இருந்த ஊர் அல்லது ஊர்கள் மற்றொரு ஆட்சிக் காலத்தில் மற்றொரு நாட்டில், வளநாட்டில், கோட்டத்தில், கூற்றத்தில் அமைந்து இடம் பெற்றுள்ளது.

இந்த நிர்வாகப் பிரிவுகளில் பெரும்பாலன ஊர்ப் பெயர் களையே அடிப்படையாகக் கொண்டு அமைந்தவையாகவும் உள்ளன.

### நாடு

கருநிலக்குடி நாடு—கருநிலக்குடி என்ற ஊர்ப் பெயரின் அடிப்படையில் அமைந்தது

பேரூர் நாடு—பேரூர் என்ற ஊர்ப்பெயரின் அடிப்படையில் அமைந்தது,

வேசாலிப்பாடி நாடு—வேசாலிப்பாடி என்ற ஊர்ப் பெயரின் அடிப்படையில்அமைந்தது.

## வளநாடு

சிங்கபுர வள நாடு—சிங்கபுரம் என்ற ஊர்ப் பெயரின் அடிப்படையில் அமைந்துள்ளது.

## கோட்டம்

களத்தூர்க் கோட்டம்—களத்தூர் என்ற ஊர்ப் பெயரின் அடிப்படையில் அமைந்துள்ளது

காலியூர்க் கோட்டம்—காலியூர் என்ற ஊர்ப் பெயரின் அடிப்படையில் அமைந்துள்ளது.

புலியூர்க் கோட்டம்—புலியூர் என்ற ஊர்ப்பெயரின் அடிப் படையில் அமைந்துள்ளது

## கூற்றம்

ஆர்க்காட்டுக் கூற்றம்—ஆர்க்காடு என்ற ஊர்ப்பெயரின் அடிப் படையில் அமைந்தது.

ஆவூர்க் கூற்றம் — ஆவூர் என்ற ஊர்ப்பெயரின் அடிப்படை யில் அமைந்தது.

பாகனூர்க் கூற்றம் — பாகனூர் என்ற ஊர்ப் பெயரின் அடிப்படையில் அமைந்தது.

## மண்டலம்

மண்டலம் என்ற நிர்வாகப்பிரிவு சோழமண்டலம், தொண்டை மண்டலம், பாண்டி மண்டலம் என அரசர்களின் குலப்பொதுப் பெயரை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருந்தாலும் குறிப்பிட்ட மன்னன் பெயராலும் அமைந்திருந்ததாகத் தெரிகிறது.

ஜயங்கொண்ட சோழமண்டலம்—ஜயங்கொண்ட சோழ னின் பெயரை அடிப் படையாகக் கொண்டு அமைந்தது.

வளநாடு போன்ற நிர்வாகப் பிரிவு மன்னனின் பெயர், அவன் பட்டப்பெயர் ஆகியவற்றாலும் பெயர் பெற்றிருந்தது.

அருமொழி தேவ வளநாடு
ராஜராஜ வளநாடு
ராஜேந்திர சிங்க வளநாடு
நித்த வினோத வளநாடு
விருதராச பயங்கர வளநாடு.

வளநாடு போன்ற நிர்வாகப் பிரிவுகள் மட்டுமல்லாமல் ஊர்ப் பெயர்களும் மன்னனின் பெயர், அவன் பட்டப்பெயர், அவன் மனைவி போன்ற உறவினர் அல்லது அரசு அலுவலர் இவர்களின் பெயர் ஆகியவற்றாலும் பெயர் பெற்றிருந்தமைக்குச் சான்றுகள் உள்ளன.

உத்தம சோழபுரம்
உத்தம பாண்டிய நல்லூர்
இரவிகுல மாணிக்க நல்லூர்
கீர்த்தி விசயாலய நல்லூர்
குலசேகரபுரம்
ராஜராஜ குளத்தூர்
வானவன் மாதேவி சதுர்வேதிமங்கலம்
உலகமகாதேவி புரம்
சோழகுல வல்லிபுரம்
தொண்டைமான் நல்லூர்

ஒய்மா நாட்டுத் தனியூர் உலோக மாதேவிபுரம்[1] என்று கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள இவ்வூர் தென்னார்க்காடு மாவட்டத்தில் திண்டிவனம் வட்டத்தைச் சேர்ந்த கிளியனூரையடுத்து உள்ளது. தற்காலத்தில் உலகாபுரம் என்ற பெயருடன் வழங்கப் படுகிறது.

நாகலாதேவியம்மன்புரம்[2] என்ற பெயருடைய இவ்வூர் விஜயநகர அரசி நாகலா தேவியின் பெயரால் பெயர் பெற்றிருக்க வேண்டும் என்றும்,[3]

பஞ்சவன் மாதேவிபுரம்[4] என்ற பெயருடைய இவ்வூர் இராஜேந்திர சோழனின் பட்டத்தரசி ஐவருள் ஒருவராகிய பஞ்சவன் மாதேவியின் பெயரால் பெயர் பெற்றிருக்க வேண்டும் என்றும்[5] அறிஞர்கள் கருதுகின்றனர்.

நாகலாதேவியம்மன்புரம் என்ற ஊர் இப்பொழுது நாகலாபுரம் என்றும், பஞ்சவன் மாதேவிபுரம் என்ற ஊர் இப்பொழுது

1. S.I.I. Vol. XIII No. 54.
2. ,, Vol. XVII No. 684A.
3. The Inflnence of Vijayanagar Empire of Tamil Nadu Place names P. Shanmugam, Sri Vasavi collegc, Erode.
4. S.I I. Vol. XVII. No. 144.
5. Study of Some Place names—S. Veerasawy, chennimalai

பஞ்சமாதேவி என்றும் வழங்கப்படுகின்றன. நாகலாபுரம் என்றும், பஞ்சமாதேவி என்றும் பெயருடைய ஊர்கள் தமிழ் நாட்டில் ஒன்றற்கு மேற்பட்டு உள்ளன. தென்னார்க்காடு மாவட்டத்தில் திண்டிவனம் நகரையடுத்து ஒரு நாகலாபுரம் உளது.

எட்டி, ஏனாதி, காவிதி, மாராயம் என்ற பட்டப்பெயர்களை (அரசு அலுவலர்களுக்குக் கொடுக்கப்பட்ட பட்டப் பெயர்கள்) அடிப்படையாகக் கொண்ட ஊர்ப் பெயர்கள் இன்றும் வழக்கில் உள்ளன.

எட்டி, ஏனாதி, காவிதி, மாராயம் என்பன மன்னர்களால் சிறப்பிக்கப்படுபவர்கள் பெறும் பட்டப் பெயர்கள்.

எட்டி என்பது வணிகர் பெறும் ('எட்டிகுமரன் இருந்தோன் தன்னை'—மணி. 4—58) பட்டப்பெயர்.

ஏனாதி என்பது அமைச்சரும் ('சோழிக ஏனாதி தன்முக நோக்கி' மணி. 22-205), படைத்தலைவரும் (பிங்கலம்), மறவரும் (பிங்கலம்), பெறும் பட்டப்பெயர். ஏனாதிப் பட்டம் பெற்றவருக்கு மன்னன் மோதிரம் அளித்துச் சிறப்பித்தான். அது ஏனாதி மோதிரம் (சீவக. 2569. உரை) எனப்பட்டது.

காவிதி என்பது வேளாளரும், வணிகமாதரும், வரிதண்டும் தலைவரும் பெறும் பட்டப்பெயர். வணிகமாதர் காவிதிப் பட்டத்துடன் வணிகர் பெறும் பட்டமாகிய எட்டி பட்டத்தையும். ('எட்டி காவிதி பட்டந் தாங்கிய மயிலியன் மாதர்' பெருங். இலாவா. 3-144.) பெறுவர். இக்காவிதிப் பட்டம் பெற்றவருக்கு மன்னனால் அளிக்கப்படும் ஊர் காவிதிப்புரவு எனப்படும். காவிதி என்னும் பட்டத்துடன் பொற்பூவும் அளிப்பது மரபு. இப்பொற்பூ காவிதிப்பூ எனப்படும்.

மாராயம் என்பது மன்னனால் சிறப்பிக்கப்படுவோர் பெறும் பட்டப்பெயர்.

எட்டி — எட்டி சிறுவேளூர்.
காவிதி — காவிதிப் பாக்கம்
மாராயம் — மாராய குப்பம்

காவிதிப்பாக்கம் என்பது காவிரிப்பாக்கம் என்றும், காவேரிப் பாக்கம் என்றும் இப்பொழுது வழக்கிலுள்ளது. தென்னார்க்காடு மாவட்டத்தில் திண்டிவனம் நகரையடுத்து ஒரு காவேரிப்பாக்கம் உள்ளது. ஒன்றற்கு மேற்பட்ட காவேரிப்பாக்கங்கள் தமிழ் நாட்டில் உள்ளன.

தென்னார்க்காடு மாவட்டத்தில் திருக்கோவிலூருக்கருகில் ''ஏனாதி மங்கலம்' என்று ஓரூர் உள்ளது. விருத்தாசலத்துக் கருகில் ஓரூரின் பெயர் 'ஏனாதி மேட்டூர்', தேவகோட்டையி லிருந்து ஓரியூர் போகும் வழியில் 'ஏனாதி கிராமம்' என்ற பெய ரில் ஒருர் உள்ளது.[6]

ஊர்ப்பெயரை அடிப்படையாகக் கொண்டு நாடு போன்ற நிர் வாகப் பிரிவு பெயர் பெற்றது போல் நாடு போன்ற நிர்வாகப் பிரிவின் பெயரை அடிப்படையாகக் கொண்டும் ஊர்ப்பெயர் அமைந்திருந்ததாகத் தெரிகிறது.

அண்ணா நாடு என்ற பிரிவில் திருவண்ணாமலை என்ற ஊர் அமைந்திருந்ததாக 'அண்ணா நாட்டு உடையார் திருவண்ணா மலை உடைய நாயனார்' என்ற கல்வெட்டுத் தொடரால்[7] தெரி கிறது. அண்ணா நாட்டில் உள்ள மலை கார்த்திகை விழாவால் புகழ்படைத்த ஒன்று. அத்தகைய புகழ் படைத்த மலை அமைந்த ஊர் அண்ணா நாட்டு மலை என்று நாட்டின் பெயர் அடிப்படை யில் தோன்றி, காலப்போக்கில் உச்சரிப்பதில் ஏற்ற இடர்ப்பாட் டால் மருவி, அண்ணாமலை என ஆகி, திரு என்ற அடையுடன் திருவண்ணாமலை என ஆகியது.[8]

ஒரு ஊரின் ஒரு பகுதியை வேறு பிரித்து, ஒரு தனிக் குடி யிருப்பு ஆக்கி அதற்கு மன்னன் தன் பெயரை வைத்து வழங்கச் செய்யும் மரபு இருந்து வந்ததாகத் தெரிகிறது.

குலோத்துங்க சோழநல்லூர்

'இவ்வூர்ப் பிடாகை பூலால சுந்தரநல்லூரிலே ஐம்பதிற்று வேலி நிலம் மூன்றாவது முதல் தேவதான இறையிலியாக இட்டு முன்புடையாரும் பழம் பெரும் பிரமதேசமாய் வருகிறபடியும் முந் நிறை கட்டிநபடியும் குலோத்துங்க சோழநல்லூர் என்னும் பேரால் வேறுபிரித்து'[9] என்னும் கல்வெட்டுத்தொடர் இதற்குச் சான்று.

புதிய ஊர்களை அமைத்து, அதற்கு ஒரு புதுப் பெயரிட்டு வழங்கும் மரபும் இருந்து வந்துள்ளது.

---

6. தாய் தீபாவளி மலர்—14.11.82.
7. S.I.I. Vol. VII No. 96.
8. The Derivation of the name Tiruvannamalai— P. Venkatesan, Mysore.
9. S.I.I. Vol. XVII No. 36.

சிமாஹேஸ்வர நல்லூர்—

'தங்கள் பொருளிட்டு அண்ணா நாட்டு எல்லையில் திருந்திகையாற்றை அடைத்து ஏரியும் வெட்டி தூம்பும் இட்டு சிமாஹேஸ்வர நல்லூர் என்று பேருமிட்டு'[10] என்னும் தொடர் இவ்வகைக்குச் சான்று.

கல்வெட்டில் காணும் ஊர்ப்பெயர்கள் பெயர் பெற்ற முறைகளில் சிலவற்றைக் கண்டோம். அடுத்து அப்பெயர்கள் அமைப்பில் பெற்ற மாற்றங்களைக் காண்போம்.

---

10. ,, Vol. VIII, No. 83.

# 4. காலப்போக்கில் ஊர்ப்பெயர்களில் மாற்றம் ஏற்பட்டநிலை

ஊர்ப்பெயர்கள் தொன்று தொட்டு எந்த வித மாற்றமும் இன்றி கல்வெட்டில் வழங்கியவாறே வழங்கி வரும் நிலையும் காணப்படுகிறது. ஆயினும் ஓரளவு மாற்றம் பெற்று மருவி வழங்கி வரும் பெயர்களும் உண்டு. அவ்வாறு மாற்றம் ஏற்படும் பொழுது ஓரளவு மாற்றம் பெற்று வழங்குவதோடு, சுருக்கம் கருதியோ, பெயரில் ஒலிமாற்றம் ஏற்பட்டோ, முன்னும் பின்னும் சில அடைகள் சேர்ந்து பெயர் மாறியோ வழங்கி வந்துள்ள நிலையை நாம் காண்கிறோம்.

எவ்வித மாற்றமும் இன்றி வழங்கிய பெயர்கள்:

| | |
|---|---|
| செஞ்சி | திருவல்லம் |
| சேலம் | பெடாரியூர் |
| திருப்பரங்குன்றம் | பேரூர். |

போன்ற பெயர்கள் அன்று கல்வெட்டில் வழங்கியவாறே மாற்றம் இன்றி இன்றும் வழங்கி வருகின்றன. 'பூந்துறை நாட்டுப் பெடாரியூர்'[1] என்று கல்வெட்டில் கூறப்பட்ட பெடாரியூர் கோயம்புத்தூர் மாவட்டம் பெருந்துறை வட்டம் விஜயமங்கலம் மிட்டா மவுசைச் சேர்ந்தது. சுருக்கம் கருதி வழங்கிய பெயர்கள்:

'சுந்தர சோழபுரம்' எனக் கல்வெட்டில் வழங்கப் பெற்ற ஊர். இன்று 'சுந்தரம்' என்ற பெயருடன் வழங்கி வருகிறது. இவ் ஊர் புதுக்கோட்டை மாவட்டம் திருமய்யம் வட்டத்திலுள்ளது.[2]

---

1. தெ. இ. கோ. சா. 1091
2. புது எண 189

'இரணிய சிங்கநல்லூர்' எனக் கல்வெட்டில் வழங்கப்பெற்ற ஊர், இன்று 'இரணியல்' என்று சுருங்கி வழங்கி வருகிறது.[3] ஒலி மாற்றம் ஏற்பட்ட பெயர்கள்.

'மாளவர் மாணிக்கம்' எனக் கல்வெட்டில் வழங்கப் பெற்ற ஊர் இன்று வாளவர் மாணிக்கம் என வழங்கி வருகிறது. இவ்வூர் புதுக்கோட்டை மாவட்டம் திருமய்யம் வட்டத்திலுள்ளது.[4]

'மாவண்டூர்' என்று கல்வெட்டில் வழங்கப் பெற்ற பெயர் 'மாமண்டூர்' எனத் தற்காலத்தில் வழங்குகிறது. இவ்வூர் வட ஆர்க்காடு மாவட்டம் செய்யார் வட்டத்திலுள்ளது.[5]

'சிங்கபுர வளநாட்டு செஞ்சிப்பற்று சிங்கபுரம்' என்று கல் வெட்டில் கூறப்பட்ட சிங்கபுரம் என்ற பெயர் இன்று 'சிங்கவரம்' என்று வழங்கி வருகிறது.[6] தென்னார்க்காடு மாவட்டம் செஞ்சி வட்டத்தில் உள்ளது இவ்வூர். செஞ்சி நகரை ஒட்டி ஓரிரு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இங்குள்ள சிறு குன்றின் மேல் திருமால் கோயில் ஒன்று உள்ளது.

'திருக்கொடி' என்ற கல்வெட்டுப் பெயர் 'கொடியக்காடு' என மாறி இன்று வழங்குகிறது. திரு என்ற முன் ஒட்டுக் காலப் போக்கில் மறைந்து 'காடு' என்ற பொதுக் கூறு பிற்சேர்க்கையாகி 'கொடியக்காடு' என்று வழங்கி வருகிறது.[7] இவ்வூர் தஞ்சாவூர் மாவட்டத்தில் திருத்துறைப் பூண்டி வட்டத்தில் உள்ளது.

''கோலிய நல்லூர்'' என்று கல்வெட்டில் இடம் பெற்ற பெயர் இன்று ''கோலியனூர்'' என்று வழங்கி வருகிறது. இவ்வூர் தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரம் வட்டத்திலுள்ளது. விழுப்புரத்திற்கு மேற்கே சுமார் ஐந்தாறு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.[8]

கல்வெட்டிலேயே மாற்றத்துடன் வழங்கும் பெயர்களும் உண்டு. அதாவது ஒரு கல்வெட்டில் அப்பெயர் ஒருவகையாகவும், மற்றொரு கல்வெட்டில் சிறிது மாறுதலுடன் வேறு வகையாகவும் வழங்குகிறது.

---

3. கன். கல் தொகுதி 4. தொ. எ. 1969/9
4. புது எண் 324
5. S. I.I vol xvii No. 664
6. S. I. I. vol. XVII, No. 254
7. ,, ,, No. 553
8. ,, ,, No. 148

பூவாநிலை சுந்தர சோழநல்லூர்[9] என ஒரு கல்வெட்டில் வழங்கிய, அதே ஊர்ப்பெயர் பூவால சுந்தர நல்லூர்[10] என மற்றொரு கல்வெட்டில் வழங்கியுள்ளது.

இத்தகைய பெயர் மாற்றங்களில் ஒருசில மன்னர்களாலேயே செய்யப் பெற்றுள்ளன. தங்களுடைய பெயர், புகழ் முதலியவை அழியாமல் என்றும் நிலைத்து நிற்க வேண்டும் என்ற நோக்கத் துடன் இத்தகைய மாற்றங்களை மன்னர்கள் செய்திருக்கலாம் எனக்கருத இடமுண்டு. என்றும் நிலைத்து நிற்பவை ஊர்ப் பெயர்கள். ஆகையால் அவற்றுடன் தங்கள் பெயர், புகழ் முதலிய வையும் நிலைத்து நிற்கும் என்று அவர்கள் கருதியிருக்க வேண்டும். முதல் குலோத்துங்க சோழன் காலத்தில்தான் இத்தகைய பெயர் மாற்றங்கள் ஏற்பட்டன என்கின்றனர் அறிஞர்கள்.[11]

தன் வெற்றியின் நினைவாக மன்னர்கள், தாம் வென்ற ஊர் களில் உரிமையை நிலைநாட்ட அவ்வூர்களின் பெயர்களை மாற்றி தங்கள் பெயரால் அவ்வூர்களின் பெயர்களை அமைத்துள்ளனர்.

இராஜேந்திர சோழதேவன் கி.பி. 1034-35-இல் தான் வென்ற இடத்திற்கு மும்முடி சோழபுரம்[12] என்று பெயரிட்டான்.

அழகிய பாண்டியன்[13] கி.பி. 1076-இல் தான் வென்ற இடத் திற்கு அழகிய பாண்டியபுரம் என்று பெயரிட்டான்.

அடுத்து அந்தணர்களுக்கோ அல்லது கோயில்களுக்கோ தானம் அளிக்கும் போது அவ்வாறு அளிக்கப்படும் ஊர்களுக்கு மன்னர்கள் தங்கள் பெயர்களை வைத்தனர். பழம் பெயர்கள் மாற்றம் பெற்று புதிய பெயர்கள் அமைந்தன.

புகழியூரான நிகிரிலி சோழபுரம்
மகிமாலை நல்லூரான குலோத்துங்க சோழநல்லூர்

---

9. S. I. I. Vol. XVII ,No. 143
10. ,, ,, No. 136
11. "The largest number of remaining ceremonies is found during the reign of Kulothunga I, who seems to have been fed up with old names and erased out most of them as a policy" - (Y. Subbarayalu, Political Geography of the chola country).
12. S. I I vol. XVII No. 310
13. கன். கல். தொகுதி 5. தொ. எ. 1969 /85

அரசர்கள் சில ஊர்களின் பெயர்களை மாற்றி உறவினர்கள் பெயராலும் அமைத்தனர். இதுவும் பெயர்கள் மாறியமைக்கு ஒரு காரணமாக அமைந்தது.

மகாதேவி மங்கலம்
வானவன் மாதேவி சதுர்வேதிமங்கலம்.

சோழகுலவல்லி என்ற சோழ இளவரசி கேரளமன்னன் பூதலவீர ஸ்ரீவீர உதய மார்த்தாண்ட வீரரை மணந்த பொழுது சீதனமாகக் கொண்டு வந்த ஊருக்கு, அவ்வாறு சீதனமாகக் கொண்டு வந்தவர் நினைவாக சோழகுல வல்லிபுரம் என்று பெயர் வைத்ததாகவும் தெரிகிறது.[14] சோழ குலவல்லி நல்லூர் என்றுகூடப் பெயர் கூறப்பட்டுள்ளது மற்றொரு கல்வெட்டில்.

மேற்கூறிய காரணங்களில் ஏதாவது ஒரு காரணத்தினால் பெயரை மாற்றி அமைக்கும் பொழுது அன்று வரை வழங்கிய பழைய பெயரை முன்கூறி, ஆன அல்லது ஆகிய போன்ற ஒரு சொல்லை இடையில் கூறி புதுப்பெயரைப் பின்னர் கூறும் மரபு இருந்திருக்கிறது. அவ்வாறு வேறு பெயர் வைக்கும்பொழுது பிரதி நாமம் என்று குறிப்பிட்டுக் கூறும் பழக்கமும் இருந்தது.

கீரனூர் ஆன கொழுமங்கொண்ட சோழநல்லூர்
செய்யூரான ஜெயங்கொண்ட சோழ நல்லூர்
செழியனூரான இரணசிங்கராம நல்லூர்
திருக்கழுக்குன்றமான உலகளந்த சோழபுரம்
தென்னையூரான புக்களப்புரம்
நெடுமணலாகிய மதநமஞ்சரி சதுர்வேதிமங்கலம்
பொம்மபுரத்துப் பிறதிநாமம் ஆகிய நுங்கம்பாக்கம்

தானமாகக் கொடுக்கும் பொழுது இரண்டு ஊர்களைச் சேர்த்து, அவ்வாறு சேர்க்கப்பட்ட பகுதிக்கு ஒரு புதுப்பெயர் கொடுத்துக் கூறும் மரபும் இருந்திருக்கிறது.

திருஞானசம்பந்த நல்லூர்[15]

---

14. Travancore State Manual Vol. I
15. ''ஜயங் கொண்ட சோழ மண்டலத்து அத்திப்பற்று நாட்டவரோம் இப்பற்று பலகுன்றக் கோட்டத்து நாவற் பாக்கமும் இதில் பிரிவாந குதிரைச் சேவகன் தாங்கலும் முன்னான் நாலாவது நாளில் தம்பிரானார் திருப்பாட்டு ஓதும் மாஹேஸ்வரர்க்கு காணிமடப்புற இறையிலி ஆக திருஞான சம்பந்த நல்லூர் என்று உதகபூர்வதானமாக கைய்ஓலையும் திருமுகமும் குடுத்தருளினபடி'' — S. I. I. vol. VIII No. 106

இந்த வகையிலும் பழம் பெயர்கள் மாறிப் புதுப்பெயராக மாற்றம் பெற்று அமைந்தமை நோக்கத்தக்கது.

இத்தகைய மாற்றங்கள் வரலாற்று ஆய்வில் குழப்பம் தவிர்த்து ஆய்வாளருக்கு உதவும் பயன்பாடு உடையது.

## பிறமொழித்தாக்கத்தால் பெயர் மாற்றம் பெற்றநிலை

மேற்கூறிய காரணங்களேயன்றி பிறமொழித் தாக்கத்தாலும் ஊர்ப்பெயர்கள் மாற்றம் அடைந்தன. ஆரியர்கள் தமிழகத்தில் குடியேறத் தொடங்கிய காலத்திலிருந்தே வடமொழிச் சொற்கள் தமிழில் கலக்கத் தொடங்கின. தமிழர்களிடை ஆரியப் பண்பாடும் கலக்கத் தொடங்கியது. ஆரியர்களின் ஆதிக்கமும் தமிழ்நாட்டில் நிலைநிற்கத் தொடங்கியது தங்கள் செல்வாக்கு வளர ஊர்ப் பெயர்களையும் பயன்படுத்தினர். இந்த வகையில் தமிழக ஊர்ப் பெயர்கள் வடமொழிச் செல்வாக்கைப் பெற்றன. தமிழக ஊர்ப் பெயர்களில் பல வடமொழித் தொடர்பு கொண்டு மாற்றம் அடைந்தன. அவ்வாறு மாற்றப்பட்ட ஊர்ப்பெயர்களுக்குப் புராணத் தொடர்பான கதைகளையும் ஏற்படுத்தி மக்களை நம்பும்படிச் செய்தனர். இந்த வகையில் பழைய தமிழ்ப் பெயர்கள் தாம் தோன்றிய காரணத்தை இழந்தன. கதைகளை நம்பி மக்கள் பழைய காரணத்தையும் மறக்கும் நிலை ஏற்பட்டது.

| | | | |
|---|---|---|---|
| குடமூக்கு | என்பது | கும்பகோணம் | எனவும் |
| குரங்குக்கா | ,, | கபிஸ்தலம் | ,, |
| மயிலாடுதுறை | ,, | மாயூரம் | ,, |
| திருத்தினைநகர் | ,, | தீர்த்தனகிரி | ,, |
| திருமறைக்காடு | ,, | வேதாரண்யம் | ,, |
| திருமுதுகுன்றம் | ,, | விருத்தாசலம் | ,, |

மாற்றம் பெற்றமைக்குக் காரணம் வடமொழியின் தாக்கமே, குடமூக்கு, குரங்குக்கா, மயிலாடுதுறை, திருத்தினை நகர், திருமறைக்காடு, திருமுதுகுன்றம் போன்ற பழத்தமிழ்க் கல் வெட்டில் காணும் ஊர்ப்பெயர்கள் தற்பொழுது முறையே கும்பகோணம், கபிஸ்தலம், மாயூரம், தீர்த்தனகிரி, வேதாரண்யம் விருத்தாசலம் என்பன போன்று வழங்கப்படுகின்றன.

# 5. கல்வெட்டில் காணும் ஊர்ப்பெயர்கள் மூலம் நாம் அறியும் செய்திகள்

கல்வெட்டுகள் நாட்டின் பண்டைய வரலாறு, பண்பாடு, பழக்கவழக்கங்கள், நடைபெற்ற போர்கள் ஆகியவற்றை அறிய துணைபுரிகின்றன என்றும், பழங்காலத்தில் செய்யப்பெற்ற தானங்கள், அறச்செயல்கள் போன்றவற்றையும் அக்கல் வெட்டுகள் மூலம் தெரிந்து கொள்ளலாம் என்றும் நாம் முன்னமே கண்டோம். இத்தகவல்களை நாம் அறிய நமக்குத்துணை புரிவன வற்றுள் அக்கல்வெட்டுகளில் இடம் பெறும் ஊர்ப்பெயர்களும் ஒன்று. இவ்வூர்ப்பெயர்கள் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலி ருந்தே வழக்கில் இருந்து வருவதால் அக்கால வரலாற்றை, நடை முறையைத் தெள்ளத் தெளிய உணர்த்துகின்றன.

கல்வெட்டில் காணப்பெறும் ஊர்ப்பெயர்களையடுத்து தேவதானம், பள்ளிச்சந்தம், திருவிடையாட்டம், தேவதானப் பிரமதேயம், பிரமதேயம், சதுர்வேதிமங்கலம், மங்கலம், அகரச் சீர்மை, அகரப் பிரமதேயம் போன்ற சொற்களும், தொடர்களும் முன்னும் பின்னும் காணப்பெறுகின்றன. இவையெல்லாம் நமக்கு உணர்த்தும் தமிழர் வரலாறு ஆய்ந்து, உணர்ந்து, பெருமிதம் அடையத்தக்கவை.

பண்டைக்கால அரசர்கள், அரசிகள், அரசுஅலுவலர்கள், வள்ளல்கள் ஆகியோர் தானங்கள் செய்வதையும், பிற அறச் செயல்கள் செய்வதையும் தமது தலையாய வாழ்க்கைச் செயல் களில் ஒன்றாகக் கொண்டு வாழ்ந்து வந்தனர். கோயில்களுக்குத்

தானங்கள் அளித்தனர். நிலங்களாக, பொருள்களாக, ஊர்களாக அளித்தனர். கோயில்களில் உள்ள கடவுளர்களுக்கு, அதாவது கடவுளர்களுக்கு நடைபெற வேண்டிய அன்றாட வழிபாட்டு முறைகள், திருவிழாக்கள் போன்ற சிறப்பு வழிபாடுகள் தவறாமல் நடைபெற தானங்கள் செய்தனர்.

அதைப் போலவே சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்து வந்த, கடவுளர்களுக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப் பட்டு வந்த அந்தணர்களுக்கும் நிலங்கள், ஊர்கள் இவற்றைத் தானமாக அளித்தனர். அவ்வாறு கடவுளர்களுக்கும், அந்தணர் களுக்கும் தானமாக அளிக்கப்பட்ட நிலங்களுக்கு வரி தவிர்த்து, அவற்றை இறையிலி ஆக அளித்தனர் அரசர்கள். நான்மறையில் வல்ல அந்தணர்களுக்கெனத் தனிக் குடியிருப்புகள் அமைத்துத் தந்தனர். அதன் மூலம் நான்மறையில் வல்லமை பெற வழி வகுத்தனர். கடவுளர் வழிபாடுகள் தவறாமல் நடைபெறச் செய் தனர்.

அந்தணர்கள் மட்டும் அன்றி பல சாதியினரும் தத்தமக்கெனத் தனித்தனிக் குடியிருப்புகளைக் கொண்டு வாழ்ந்து வந்தனர் என்பதையும் கல்வெட்டில் காணும் ஊர்ப்பெயர்கள் நமக்கு அறிவிக்கின்றன.

மேலும் மடம், சத்திரம் போன்றவற்றிற்கும், துறவிகளுக்கும் தானம் அளித்தனர். இத்தகைய தானதருமங்களே யன்றி, மன்னர்களின் போர்ச் செயல், வெற்றி ஆகியவற்றையும் நாம் அறிய முடிகிறது. மன்னர்கள் மட்டுமன்றி தனி நபர்கள் புரிந்த வீரச்செயல் போன்ற அவர்களின் வாழ்க்கைக் கூறுகளையெல்லாம் நாம் அறிகிறோம்.

தேவதானம்: கோயில்களுக்கு, அதாவது கடவுளர்களை வழி படும் செயல் தடையின்றி நடைபெற நிலங்கள், ஊர்கள் தானமாக அளிக்கப் பெற்றன. அவ்வாறு கோயில்களுக்கு அளிக்கப் பெற்ற தானங்களில் சிவன் கோவில்களுக்கு அளிக்கப் பெற்ற நிலங்கள் தேவதானம் என்னும் பெயரால் குறிக்கப்பெற்றன.

திருவோத்தூருடைய நாயனார் தேவதானம் ஆன திருவோத்தூர்[1]

இன்னாயனார் தேவதானம் ஆலச்சுக்குடி[2]

1. S.I.I Vol. VII No. 115 (A.R.No. 104A of 1900)
2. ,, ,, No. 148 (A R No 135 of 1900)

பொதுவாகக் கோயிலில் வழிபாடு நடைபெற வழங்கப் பெற்ற தானத்தைப்போல பூசைசெய்தல், விளக்கெரித்தல், விசேஷ உற்சவங்கள் நடத்தல் போன்ற குறிப்பிட்ட செயல்களுக்காகவும் தானங்கள் வழங்கப் பெற்றன.

(அ) கோயிலில் விளக்கெரிய செய்யப்பட்டதானம் திருக்காமஞ்சூர் ஊரார் விளக்கெரிய நெய்தானம் செய்துள்ளனர்.[3] திருவிளக்குப்புறமாக திருநாமத்துக் காணியான தேவதானம் தச்சன் தாங்கல்[4]

(ஆ) மகர சங்கிரமண தினத்தன்று விசேஷ உற்சவம் நடத்த வீரராகவப் பெருமாளுக்கு மகர சங்கிரமண தினத்தன்றைக்கு விசேஷ உற்சவம் நடத்துவதற்காகத் தலகாஞ்சேரி என்னும் கிராமத்தில் ஆயிரம் குழி நிலம் தானம் செய்துள்ளனர்.[5]

## பள்ளிச்சந்தம்

ஜைன பௌத்தப் பள்ளிகளுக்கு அளிக்கப் பெற்ற தானம் பள்ளிச்சந்தம் என்னும் பெயரால் குறிக்கப்பெற்றன. இராஜராஜனின் தமக்கையராகிய குந்தவைப் பிராட்டியார் வைகைத் திருமலையில் ஒரு ஜினாலயம் அமைத்ததாகவும், அது குந்தவை ஜினாலயம் என்று பெயர் பெற்றதாகவும் தெரிகிறது.[6]

''முகைநாட்டுப் பள்ளிச்சந்தம் வைகலூர்த் திருமலை ஸ்ரீ குந்தவை ஜிநாலயத்து தேவற்குப் பெரும் பாணப்பாடிக் கரை வழி மல்லியூர்''[7] என்ற செய்தியும்;

''திருப்பருத்திக்குன்றில் நாயனார் செம்பொற் குன்றாழ்வார் பள்ளிச்சந்தம் காலியூர்க் கோட்டத்து விற்பெட்டு நாட்டு காண்ணிப்பாக்கம் நெடுநாள் செல்லாதே இதனைத் தியாக சமுத்திரம் பட்டையாரான விமரைசர் ராஜராஜ தேவர்க்கு யாண்டு பதினெட்டாவது முதல் இதை நாயனார்க்குப் பள்ளிச்சந்தமாக விட்டார் காண்ணிப்பாக்கம் விமரைசர்''[8] என்ற செய்தியும் இக்கருத்தை வலியுறுத்துகின்றன.

---

3. S.I.I.Vol. XIX No.424 (A.R.No.443 of 1917)
4. S.I,I.Vol. VII No.107 (A.R.No.97 of 1900)
5. தெ.இ.கோ.கா. 1106
6. ஊரும் பேரும்—தேவும் தலமும்—சமணமும் சாக்கியமும் ரா.பி சேதுப்பிள்ளை.
7. S.I.I.Vol.I No.67
8. S.I.I. Vol.VI No.368 (A,R.No. 45 of 1890)

ஊருடையான் பள்ளி, சரப்பள்ளி போன்ற கல்வெட்டு ஊர்ப் பெயர்கள் பள்ளிகள் இருந்தமையை நமக்கு அறிவிக்கின்றன.

திருவிடையாட்டம்: வைணவக் கோயில்களுக்கு அளிக்கப்பட்ட தானம், நிலங்கள் திடையாட்டம் என்ற பெயரால் குறிக்கப் பட்டன.

"......ஆக இன்னான் கெல்கைக்குட்பட்ட பற்றில் உடையார் திருக்குற்றாலமுடைய நாயனார் தேவதானமும் உடையார் விக்கிரம பாண்டீஸ்வரமுடைய நாயனார் தேவதானமும் நயினார் திருவிருந்த பெருமாள் திருவிடையாட்டமும் ஸ்ரீ கிருஷ்ணன் திருவிடையாட்டமும் பராக்கிரம பாண்டிய நல்லூரில் நயினார் திருவேங்கடநாதன் திருவிடையாட்டமும் முகந்தானத்து நாராயண ஸ்ரீபாதங்கள் மடப்புறமும் அகரப்பற்றும் நீங்கலாக இன்னான் கெல்கைக்குட்பட்ட பற்றும்" என்ற பராக்கிரம பாண்டிய தேவனின் இருபத்தெட்டாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுத்தொடர் இதற்குச் சான்று (T. A. S. vol. I. No. 11 கி. பி. 1451)

## பிரமதேயம்

சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்துவந்த அந்தணர்களுக் குத் தானதருமங்கள் செய்வதைப் பெரும் புண்ணியமாகக் கருதிய நம் பண்டைய மன்னர்கள் நிலங்களையும், ஊர்களையும் அங்கங்கே அந்தணர்களுக்குத் தானமாக அளித்தனர். அவ்வாறு பிராமணர்களுக்கு அளிக்கப் பெற்றவை பிரமதேயங்கள் எனப் பெயர் பெற்றன. அப்பிரமதேயங்களை வரிநீக்கி இறையிலியாக அளித்தனர்.

செற்றூர்க் கூற்றத்துப் பிரமதேயம் நாலூர்
பிரமதேயம் மகேந்திர மங்கலம்

## தேவதானப் பிரமதேயம்

கோயிலுக்கென அளிக்கப்பெற்ற தேவதான நிலங்கள், ஊர்கள் இவற்றின் வருவாயிலிருந்து ஒரு பகுதியைப் பிராமணர் களுக்கு அளிக்கும் நடைமுறையும், அதே போல் பிராமணர்களுக் கென அளிக்கப்பெற்ற பிரமதேயநிலங்கள், ஊர்கள் இவற்றின் வருவாயிலிருந்து ஒரு பகுதியைக் கோயிலுக்கு அளிக்கும் நடை முறையும் இருந்தன. இவ்வாறு கோயிலுக்கும் பிராமணர்களுக்கு மாக செய்யப் பெற்றவை தேவதானப் பிரமதேயம் எனப் பெயர் பெற்றன.

| ஊர்ப்பெயர் | மன்னன் | காலம் | கல்வெட்டு |
|---|---|---|---|
| வெங்கால நாடு | இராஜேந்திர சோழதேவர் | ஆட்சியாண்டு 9 | S.I.I. Vol. iii PT No. 22 |
| வெண்குடிச் சாத்து | இராஜகேசரிபந்மர் | ஆட்சியாண்டு 3 | ,, xiii No. 64 |
| வெண்குன்றக்கோட்டம் | சுந்தர பாண்டிய தேவர் | ஆட்சியாண்டு 12 | ,, vii No. 82 |
| வெண்ணாயில் | இராஜ கேசரி பந்மர் | ஆட்சியாண்டு 8 | ,, xiii No. 187 |
| வெண்ணிக்கூற்றம் | இராஜராஜதேவர் | ஆட்சியாண்டு 6 | S.I.I. Vol. vii No. 1028 |
| வெண்பைக்குடி | — | — | ,, xiv No. 106 |
| வெண்பைக்குடிநாடு | — | — | ,, ,, |
| வெண்புரை | — | — | S.I.I. Vol. xiv No. 104 |
| வெண்புரைநாடு | — | — | ,, ,, |
| வெம்பற்றூர் | இராஜேந்திரசோழ தேவர் | ஆட்சியாண்டு 4 (கி.பி.1016-17) | ,, xxiii No.1 |
| வெந்நித்தோட்டம் | — | கொல்லம் 404 (கி.பி. 1228) | கன்.கல்.தொகுதி 2 தொ.எ. 1968-160 |
| வெலக்கோன்மங்கலம் | இராஜகேசரி பந்மர் | ஆட்சியாண்டு 4 | S.I.I. Vol. No. 97 |
| வெள்காமங்கலம் | — | — | ,, viii No. 326 |
| வெள்ளிவாயில் | கோப்பரகேசரிபன்மர் | ஆட்சியாண்டு 30 | ,, iii PT iii No.105 |
| வெள்ளூர் | — | — | ,, viii No. 393 |
| வெள்ளை நல்லூர் | இராஜகேசரிபந்மர் | ஆட்சியாண்டு 4 | புது.எண் 25 |
| வெள்ளைப்பன்றியூர் | — | — | S.I.I. Vol. v No. 983 |
| வெளிச்சேரி | - | சுமார் (கி.பி. 15 ஆம் நூற்றாண்டு) | செ.மா.க. 1997-47 |

(வேளச்சேரி என்று தற்போது வழங்கப்படுகிறது)

| | | | |
|---|---|---|---|
| வெளிமாநல்லூர் | கோப்பரகேசரி பந்மர் | ஆட்சியாண்டு 24 (கி.பி.930-31) | S.I.I. Vol. xxiii No. 330 |
| வெளியாற்றூர் | மாறஞ்சடையன் | ஆட்சியாண்டு 5 (கி.பி.10 ஆம் நூற்றாண்டு) | கன்.கல்.தொகுதி 2 தொ. எ. 1968-224 |
| வெற்றியூர் | — | சகாப்தம் 1450 | ,, viii No. 180 |
| வேசாலிநாடு | இராஜேந்திர சோழ தேவர் | ஆட்சியாண்டு 2 | ,, vii No. 94 |
| வேட்டவலம் | வீரராஜேந்திர தேவர் | ஆட்சியாண்டு 7 | ,, vii No. 887 |
| வேட்டைவயல் | கோப்பரகேசரிபந்மர் | ஆட்சியாண்டு 8 | ,, xix No. 195 |
| வேப்பம்பட்டு | — | சகாப்தம் 1328 | ,, i No. 55 |
| வேப்பேரி | — | கி.பி. 1309 | ,, viii No. 537 |
| வேம்பனூர் | — | கி.பி. 12ஆம் நூற்றாண்டு | கன்.கல்.தொகுதி 4 தொ.எ. 1969-105 |
| வேய்கோட்டுமலை | — | ,, | ,, தொ.எ. 1969-384 |
| வேலங்குடி | இராஜராஜதேவர் | ஆட்சியாண்டு 23 (கி.பி.1007-08) | S.I.I. Vol. xvii No. 614 |
| வேலாயுதம் பாளையம் | — | — | தெ.இ.கோ.சா. 1171 |
| (கோயம்புத்தூர் மாவட்டம் தாராபுரம் வட்டத்திலுள்ளது) | | | |
| வேலூர் | — | — | S.I.I. Vol. xiii No. 25 |
| (ஒய்மாநாட்டு வேலூர் எனக் குறிக்கப்படுகிறது. திண்டிவனத்தையடுத்த உப்பு வேலூரே இது) | | | |
| வேளச்சேரி | — | சுமார் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு | செ.மா.க. 1967-54 |
| வேஞர் | — | கி.பி. 1858 | ,, 1967-227 |

| ஊர்ப்பெயர் | மன்னன் | காலம் | கல்வெட்டு. |
|---|---|---|---|
| வேற்காடு | — | கி.பி. 1259 | செ.மா.க. 1967-202 |
| வேஷாறுபாடி | — | கி.பி. 1309 | ,, 1967-816 |
| | | (வியாசர்பாடியாக இருக்க வேண்டும்) | |
| வைசலூர்த்திருமலை | இராஜேந்திரதேவர் | ஆட்சியாண்டு 12 | S.I.I. Vol. i No. 67 |
| வைகுந்த நல்லூர் | — | — | ,, v No. 301 |
| வைப்பூர் | — | — | ,, No. 97 |
| வையலூர் | — | — | ,, vii No. 115 |
| வை வழிப்பாக்கம் | கோப்பரகேசரிபந்மர் | ஆட்சியாண்டு 3 | ,, xix No. 56 |
| ஜயங்கொண்டசோழ நல்லூர் | — | — | ,, ii PT iv No. 95 |
| ஜயங்கொண்ட சோழ மண்டலம் | இராஜேந்திர சோழ தேவர் | ஆட்சியாண்டு 8 | ,, v No. 881 |
| ஜனநாதச் சருப்பேதி மங்கலம் | கோப்பெருஞ்சிங்க தேவர் | ஆட்சியாண்டு 16 | ,, viii No. 318 |
| ஜனநாதபுரம் | இராஜேந்திர சோழ தேவர் | ஆட்சியாண்டு 30 | ,, vi No. 33 |
| ஸொர்மங்கலம் | ,, | ஆட்சியாண்டு 3 | ,, vii No. 392 |
| ஸ்ரீகண்ட சதுர்வேதி மங்கலம் | — | — | ,, xiii No. 50 |
| ஸ்ரீகண்டபுரம் | நிருபதுங்கவர்மர் | ஆட்சியாண்டு 18 | ,, vii No. 526 |
| ஸ்ரீகரண மங்கலம் | — | — | ,, viii No. 398 |
| ஸ்ரீகரிகாலகண்ணச்சேரி | — | — | ,, v No. 633 |
| ஸ்ரீகுந்தவைசருப்பேதி மங்கலம் | இராஜராஜதேவர் | ஆட்சியாண்டு 27(கி.பி.1242-43) | ,, xvii No. 462 |

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீகைலாயம் | கோமாறஞ்சடையர் | ஆட்சியாண்டு 4 | S.I.I. Vol. v No. 728 |
| ஸ்ரீதண்டபுரம் | — | — | ,, xix No. 51 |
| ஸ்ரீதென்குணவாய் குன்றம் | பாண்டியன்சடையன்மாறன் | ஆட்சியாண்டு 16 (கி.பி.10 ஆம் நூற்றாண்டு) | கன்.கல்.தொகுதி 2 தொ. எ. 1968-181 |
| ஸ்ரீதொங்கமங்கலம் | — | — | S.I.I. Volxxiii No. 243 |
| ஸ்ரீநந்திமங்கலம் | — | சுமார்( கி.பி. 8 ஆம் நூற்றாண்டு) | கன்.கல்.தொகுதி 4 தொ.எ. 1959-38F |
| ஸ்ரீநிருப சேகரச் சருப்பேதி மங்கலம் | வல்லபதேவர் | ஆட்சியாண்டு 10 | S.I.I. Vol. xiv No. 227 |
| ஸ்ரீபத்பனாமநல்லூர் | — | சுமார் கி.பி. 1718 ஆம் நூற்றாண்டு | கன்.கல்.தொகுதி 5 தொ எ. 1959-67 |
| ஸ்ரீபரகேசரிக்காரிகுடி | — | — | S.I.I. Vol. v No. 633 |
| ஸ்ரீபுருஷமங்கலம் | — | — | ,, vii No. 63 |
| ஸ்ரீபெரும்பூதூர் | — | கி.பி. 1778 | செ.மா.க, 1967-170 |
| ஸ்ரீமதங்கஜ மல்லிச்சேரி | — | — | S.I.I. Vol. v No. 633 |
| ஸ்ரீமதுராந்தகச்சதுர்வேதி மங்கலம் | குலோத்துங்கசோழதேவர் | ஆட்சியாண்டு 3 | ,, vii No. 477 |
| ஸ்ரீரவிகுல சூளாமணிச்சேரி | — | — | ,, v No. 633 |
| ஸ்ரீராஜ ராஜ சதுர் வேதி மங்கலம் | சுந்தரபாண்டியதேவர் | ஆட்சியாண்டு 14 | ,, xiv No. 149 |
| ஸ்ரீவல்லமங்கலம் | — | கொல்லம் 404 (கி.பி. 1228) | கன்.கல். தொகுதி 2 தொ.எ. 1968-160 |
| ஸ்ரீவைகுந்தம் | — | — | S.I.I. Vol. xxiii No.108 |

## பின்னிணைப்பு-2

# கல்வெட்டில் காணும் ஊர் பற்றிய பிறசெய்திகள்

ஊர் பற்றிய சிறப்புக் குறிப்புகள் பலவற்றைச் சில நூல்கள்* தருகின்றன. அவை ஊர்ப்பெயர் ஆய்வாளருக்கும் வரலாற்றாய் வாளருக்கும் துணை நிற்கும் எனும் கருத்தில் கீழே தொகுத்தளிக் கப்பட்டுள்ளன.

### 1 அரியலூர்

இவ்வூர் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உடையார் பாளை யம் வட்டத்தில் உள்ளது. சௌராஷ்டிரர் நெய்யும் சீலைக்குப் பேர் போனது. நோயைக் குணப்படுத்துவதாகக் கருதும் கோயில் ஒன்று இருக்கிறது.

### 2 அள்ளூர்

இவ்வூர் பாண்டி நாட்டில் சிவகெங்கை வட்டத்திலுள்ளது. இதே பெயருடன் சோழ நாட்டில் தஞ்சை மாவட்டத்திலும் ஓர் ஊர் உள்ளது.

---

* 1. கலைக்களஞ்சியம், தமிழ்வளர்ச்சிக்கழகம் சென்னை-1961
2. சிறப்புப் பெயர் அகராதி: தொகுப்பு சு. அ. இராமசாமிப் புலவர், கழகப்பதிப்பு. 1970
3. சிவஸ்தல மஞ்சரி: வ.த. சுப்பிரமணிய பிள்ளை-நான்காம் பதிப்பு-1958
4. அபிதான சிந்தாமணி: ஆ. சிங்காரவேலு முதலியார் Asian Educational Services - New Delhi 1982.

3 அறந்தாங்கி

தஞ்சாவூர் மாவட்டத்தின் தென்கோடி வட்டமாக அமைந்துள்ளது. வட்டத்தின் தலைநகரமும் அதே பெயர் பெற்றுள்ளது. சிதைந்த கோட்டையும், அதனுள் சில கோயில்களும், குளமும், வீடுகளும் உள்ளன. கோட்டைக்கு வெளியே உள்ள ஒரு கோயில் இராஜேந்திர சோழன் II-ஆம் நூற்றாண்டில் கட்டியது. பட்டுச் சேலை நெசவு உள்ளது.

4 அவளிவணல்லூர்

இவ்வூர் அவளிவளநல்லூர் எனக் கல்வெட்டில் காணப் பெறுகிறது. தஞ்சை மாவட்டத்திலுள்ளது. பூஜைக் குருக்களின் மூத்த குமாரியை மணஞ் செய்தவர் தீர்த்த யாத்திரையினின்று திரும்பி வந்து, தாம் போயிருந்த போது வைசூரியினாற் கண்ணிழந்து குருபியாய் இருந்த தம் மனைவியின் தங்கைதான் தம் மனைவியென்று நினைக்க, சுவாமி மூத்தவள் தான் அவர் மனைவியென்று சாட்சி சொல்லி 'அவள் இவள்' எனக் காட்டினதால் இத் தலத்துக்கு 'அவளிவணல்லூர்' எனப் பெயர் வந்தது என்று கூறப்படுகிறது.

5 ஆய்குடி

ஆய் அண்டிரன் என்னும் வள்ளலின் ஊர். பொதிகை மலைச் சாரலிலுள்ளது. இப்போதும் இருந்து வருகிறது. பழனிக்குப் பக்கத்தில் இப்பெயருடன் ஓர் ஊர் இருக்கிறது. வேறு சில இடங்களிலும் இப்பெயரோடு ஊர்கள் இருக்கின்றன.

6 ஆர்க்காடு

வட ஆர்க்காடு மாவட்டத்தில் பாலாற்றங்கரையில் சென்னைக்குத் தென்மேற்கே அறுபத்தைந்து மைலில் உள்ளது. இந்தப் பெயர் நகரையும் மாவட்டத்தையும் குறிக்கிறது. ஆர்க்காடு மிகப் பழைய அரண்மிகுந்த அழகிய ஊர் எனவும், சேந்தன் என்பவனுடைய தந்தை அழிசியென்பவனுக்கு உரியதாய் இருந்ததெனவும் குறுந்தொகை (258), நற்றிணைப் (190) பாடல்களால் தெரிகிறது. ஆர் என்பது ஆத்தி. சோழர்களுக்குரியது. ஆர்ப்பாக்கம், ஆரூர் என்பனவும் ஆர்மரம்பற்றி வந்த பெயர்கள். ஆற்காடு என்றால் ஆலமரக்காடு என்று பொருள் படலாம்.

ஆர்க்காடு கருநாடக நவாபுகள் காலத்தில் அவர்களுடைய தலைநகரமாக இருந்திருக்கிறது. இங்குள்ள மசூதிகள் இதன்

பழஞ்சிறப்பைக் காட்டுகின்றன. இங்கிருக்கும் டெல்லி வாயிலுக்கு மேலேயுள்ளது கிளைவ் இருந்த அறை என்பர்.

7 ஆலங்குடி

தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திலிருந்து ஒன்பதாவது மைலில் உள்ள சிற்றூர்; பாக்குவெட்டிக்குப் பேர் போனது.

8 குடமூக்கு

இவ்வூர் இப்பொழுது கும்பகோணம் என வழங்கப்பெறுகிறது. தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ளது. காவிரியாற்றுக் கழிமுக வெளியிலுள்ளது.

வட்டத்தின் தலைநகரமாகிய இவ்வூர் குடந்தை என்றும், திருக்குடந்தை என்றும் வழங்கப்பெறும். குடமூக்கு என்பது பழைய பெயர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களால் திருக்குடந்தைப் புராணம் பாடப் பெற்றுள்ளது. இங்குப் பல முக்கிய சிவன் கோயில்களும், விஷ்ணு கோயில்களும், பிரமன் கோயில் ஒன்றும், பிற கோயில்களும், மகாமகக் குளமும் உள்ளன. இங்கே பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறுகின்ற மகாமக விழா இந்தியப் புகழ் பெற்றது. இவ்வூரிலுள்ள கும்பேசுரர் கோயில் கல்வெட்டுகளிலிருந்து இக்கோயில் சோழ அரசர் ஒருவரால் புதுப்பிக்கப்பட்டது என்று தெரிகிறது. இக்கோயிலில் கல் நாகசுரம் ஒன்று உள்ளது. பதினாறு தூண் மண்டபம் ஒன்றுள்ளது. இவ்வூரிலுள்ள சாரங்கபாணிக் கோயில் வைணவக்கோயில். இதன் கோபுரம் பெரியது. சிற்ப வேலைப்பாடுகள் மிகுந்தது. இதன் மேற்றளத்தில், அடியில் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. இக்கோயிலுக்கென வேலைப்பாடுகள் நிறைந்த இரு தேர்களும் உள்ளன.

6 குற்றாலம்

இப்பெயரால் இரு முக்கிய இடங்கள் உள்ளன. (1) தமிழ் நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் தென்காசி வட்டத்தில் நீர்வீழ்ச்சிகளுக்குப் பெயர் பெற்ற ஓர் ஊர். தென்காசியிலிருந்து மேற்கே மூன்றரை மைல் தொலைவிலுள்ளது. இது மேற்குமலைத் தொடரின் தென் கிளையின் மேல் 550 அடி உயரத்தில் அமையப் பெற்றுள்ளது. இவ்வூர் குறும்பலா, திருக்குற்றாலம் முதலிய இருபத்தொரு பெயர்களால் வழங்கப்பெறும். இது ஒரு சுகவாசத் தலம். ஜூன் முதல் செப்டம்பர் வரை இங்கு மக்கள் மிகுதியாக வந்து தங்கும் சிறப்புக் காலமாக இருந்து வருகிறது. திருக்

குற்றாலத் தலபுராணம் மேலகரம்திரிகூடராசப்பக் கவிராயரால் இயற்றப் பெற்றுள்ளது.

(2) தஞ்சை மாவட்டத்தில் காவிரி ஆற்றங்கரையில் மாயூரத்திற்குத் தென்மேற்கில் ஐந்தரை மைல் தொலைவிலுள்ளது மற்றொரு குற்றாலம். இது தேவாரத்தில் 'திருத்துருத்தி' என்று வழங்கப் பெற்றுள்ளது. இங்குள்ள கோயில் மேற்குப் பார்த்தது. கோபுரம் ஐந்து நிலையுடையது.

## 10 குறுங்குடி

பாண்டி நாட்டிலுள்ளது. இது திருமாலின் திருப்பதி. மருதனார் என்ற புலவர் (குறுந். 344; அகம் 4) இவ்வூரைச் சார்ந்தவர்.

## 11 குன்றத்தூர் (குண்ணத்தூர்)

இது செங்கற்பட்டு மாவட்டத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வட்டத்திலுள்ள ஊர். பல்லாவரத்திற்கு மேற்கே இரண்டே முக்கால் மைல் தொலைவில் உள்ளது. பெரிய புராணம் இயற்றிய சேக்கிழார் பிறந்த இடம். இங்கு இரண்டு சிவன் கோயில்களும், சேக்கிழார் கோயிலும் உள்ளன. சிவன் கோயில்களுள் ஒன்றான திருநாகேசுரம் என்பது சேக்கிழாரால் கட்டப் பெற்றது. அருகிலுள்ள குன்றின் மேல் முருகன் கோயில் ஒன்று இருக்கிறது. இக்குன்றைச் சுற்றிலும் வரலாற்று முற்காலப் பெருங்கற் சவக்குழிகள் இருக்கின்றன. சுற்றிலும் வட்டக் கற்களை அடுக்கிப்பாவி சவத்தைப் புதைக்கும் பழக்கமுடைய மக்கள் சேக்கிழார் கோயிலின் பக்கத்திலுள்ள நத்தம்புறம் போக்கில் வாழ்ந்தார்கள் என்று தெரிகிறது. இதை ஆராய்வதற்கு தொல்பொருள் இலாகா ஏற்பாடு செய்துள்ளது.

## 12 கூடலூர்

இது தென்ஆர்க்காடு மாவட்டத்தின் கடலோரவட்டம்; துறைமுகப் பட்டினம்; மாவட்டத்தின் தலைநகரம்; கெடிலம் ஆறும் உப்பனாறும் கூடும் இடம்; இதுவே இதன் பெயருக்குக் காரணம். தென்பெண்ணை, கெடிலம், வெள்ளாறு ஆகிய ஆறுகள் பாய்கின்றன. வட்டத்தின் குறுக்காகக் கேப்பர்மலை செல்கின்றது. இந்நகரமானது பழைய பட்டினம், புதிய பட்டினம் (திருப்பாதிரிப் புலியூர்), மஞ்சகுப்பம், செயின்ட் டேவிட் கோட்டை என்ற நான்கு பகுதிகள் கொண்டது. பதினேழாம் நூற்றாண்டில் கொஞ்சகாலம் இஸ்லாமாபாத் என்று அழைக்கப்பட்டது.

## 13 கொங்குநாடு

பண்டைத் தமிழகத்திலிருந்த நாடுகளுள் ஒன்று. இது இன்றைய கோயம்புத்தூர், சேலம் மாவட்டங்களடங்கிய நில வெளியாகும். இதைப்பற்றிய தனிப்பாடல்களையும், கொங்கு மண்டல சதகத்தையும் கொண்டு நோக்குமிடத்துக் கொங்குநாடு என்பது மேற்கே வெள்ளிமலை, நீலகிரி மலைகளுக்கும், வடக்கே தலைமலை, பிளிகிரி ரங்கன்மலை, மாதேசுவரன் மலை, தொப்பூர் மலை என்ற மலைகளுக்கும், தெற்கே பழநிமலைகளுக்கும், கிழக்கே சேர்வராயன் மலை, பச்சைமலை, கொல்லி மலை என்ற மலைகளுக்கும் இடையிலுள்ள சமநிலமாகும். இதன் வழியாகக் காவிரி தென் கிழக்காக ஓடிச் சோழ நாட்டில் புகுகின்றது. இந் நாட்டை நாகர், கோசர், ரட்டர்கள், கங்கர், பல்லவர், இராஷ்டிர கூடர், சேரர், சோழர், பாண்டியர், ஹொய்சளர், முகம்மதியர் முதலிய பலர் அவ்வப்போது ஆண்டுவந்துள்ளனர்.

## 14 கொடும்பாளூர்

புதுக்கோட்டைப் பகுதியில் குளத்தூர் வட்டத்தில் புதுக் கோட்டைக்கு இருபத்தைந்து மைல் தொலைவிலுள்ள பண்டைய ஊர். வரலாற்றுத் தொல்பொருளியல் சிறப்பு மிக்க இடம்.

உறையூரிலிருந்து மதுரைக்குச் செல்லும் பெருஞ்சாலையில் இப்பெயருடன் ஓர் ஊர் இருந்ததாகச் சிலப்பதிகாரம் குறிக் கின்றது. கொடும்பை, இருக்குவேளூர் என்பன இதன் பழைய பெயர்கள்.

சோழரோடு உறவு பூண்டிருந்த இருக்கு வேளிர்களின் தலை நகரமாகக் கொடும்பாளூர் இருந்தது. இறுதியில் முஸ்லீம்களால் அழிக்கப்பட்டது.

இருக்கு வேளிரின் தலைநகரமாகச் சிறப்புற்று விளங்கிய காலத்தில் இங்கு இரண்டு நகரங்களும் (வணிகர்களின் கூட்டம்) ஒரு மணிக்கிராமமும் (வாணிகக்குழு) இருந்தன. இவை "ஐந் நூற்றுவர்" என்ற பெரிய வாணிகக் குழுவோடு இணைக்கப் பட்டிருந்தன.

கொடும்பாளூரில் 108 சிவன் கோயில்கள் இருந்தனவாம். அவற்றில் மிகச் சிலவே இப்பொழுது உள்ளன. இக்கோயில்கள் முற்காலச் சோழர் காலத்தவை. இருக்கு வேள் மன்னன் விக்கிரம கேசரியால் கட்டப் பெற்றவை. முகுந்தேசுவரர் கோயில்

மற்றொன்று. இதுவும் முற்காலச் சோழர் கோயிலே. இது பராந்தக வீரசோழன் காலத்தில் பத்தாம் நூற்றாண்டில் இருக்குவேள் மன்னனால் கட்டப் பெற்றது.

இவ்வூரில் வேளிர் குல அரசரும் பொன்னம்பல முகட்டினைப் பொன்னால் வேய்ந்த ஆதித்தச் சோழரது குலமுதல்வருமாகிய இடங்கழியார் என்னும் மன்னர் வசித்திருந்தார்.

## 15 சிவபுரம்

காஞ்சிபுரத்திற்குரிய பதின்மூன்று பெயர்களில் ஒன்று. முன்னாளில் திருக்கைலையில் சிவபெருமானுடைய திருக்கண்களை உமாதேவி மூடிய காரணத்தினால் உண்டாகிய குற்றம் நீங்குமாறு இப்பதிக்கு எழுந்தருளி மாவடியில் வீற்றிருக்கும் ஏகாம்பரநாதரை வழிபடுஞ் சமயத்தில் சிவபிரானுடைய கட்டளையால் கம்பாநதி பெருகி வரக்கண்டு அஞ்சி இலிங்கத்தைத் தழுவிக்கொள்ள அப்பொழுது சிவபிரான் காட்சி கொடுத்தபடியினால் உண்டாகிய பெயர்.

கும்பகோணத்துக்குத் தென்கிழக்கே மூன்று மைல் தொலைவில் இப்பெயருடன் மற்றோர் ஊர் உள்ளது.

## 16 சிறு குடி

இது கிழான் பண்ணனுடைய ஊர் என்று புறநானூறு கூறுகிறது. தஞ்சை மாவட்டத்தில் திருப்பாம்புரத்துக்கு மேற்கே ஒரு மைல் தொலைவில் உள்ளது.

## 17 சுசீந்திரம்

இவ்வூர் கன்னியாகுமரிக்கு வடக்கே எட்டு மைல் தொலைவில் உள்ளது. இங்குள்ள கோயில் எட்டாம் நூற்றாண்டில் எழுந்ததாகத் தெரிகிறது.

இந்திரன் சாபநீக்கம் பெற்ற இடமாதலால் இவ்வூர் சுசீந்திரம் என்று பெயர் பெற்றது என்பர். இங்குள்ள கோயிலின் ஏழு மாடிகளுள்ள கோபுரத்தின் சுவர்களில் இந்திரனுடைய கதை அழகாக வரையப்பட்டிருக்கிறது.

சுசீந்திரம் கோயில் திராவிடக் கட்டடச் சிற்பங்கள் சிறந்தனவற்றுள் ஒன்று. இங்குள்ள கோபுரமும் மண்டபங்களும் மிகப் பெரியவை. கோபுரம் ஏழடுக்குகள் உடையது. இது மிக உயரமாய் இருப்பதால் பல மைல் தொலைவு வரை கண்ணுக்குப் புலனாகும்.

கோயிலின் கிழக்கு வாயிலிலுள்ள கோபுரம் விஜயநகர அரசர் ஒருவர் 1545-ஆம் ஆண்டில் கட்டியதாகக் கூறுவர்.

இக்கோயிலில் உள்ள ஊஞ்சல் மண்டபம், திருக்கொன்றையடி, செண்பகராமன் மண்டபம், அலங்கார மண்டபம், உதயமார்த் தாண்ட மண்டபம் அழகான சிற்பங்கள் நிறைந்தவை செண்பக ராமன் மண்டபமே மிகப் பெரியது. இது செண்பகராமன் என்னும் பண்டைச் சேரமன்னரால் கட்டப்பட்டது. வீரபாண்டிய மணி மண்டபம் பண்டைப் பாண்டிய மன்னர் ஒருவர் கட்டியது என்று தெரிகிறது. அலங்கார மண்டபத்தின் கூரை ஒரே கல்லால் ஆகியது. அதை நான்கு பெரிய தூண்களும் பன்னிரண்டு சிறிய தூண்களும் தாங்கி நிற்பது வியக்கத்தக்க சீரிய வேலையாகும். இந்த மண்டபங்களிலுள்ள ஒவ்வொரு தூணும் 24-32 சிறிய தூண்கள் இணைந்ததாகும். அவையனைத்தும் அழகான சிற்பங்கள் நிறைந்தவை. இந்தச் சிற்பங்கள் பதினொன்று - பன் னிரண்டாம் நூற்றாண்டின என்று கருதப்படுகின்றன.

சுசீந்திரம் கோயிலில் திருமலைநாயக்க மன்னருடைய சிலை யும், விஜயநகர மன்னர்களின் சிலைகளும் காணப்படுகின்றன. சில தூண்களில் கையில் விளக்கு ஏந்தி நிற்கும் அழகான பெண்களின் சிலைகள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

இந்தக் கோயிலிலுள்ள ஒரு பெரிய தூணில் இருபத்துநான்கு தூண்கள் செதுக்கப்பட்டுள்ளன. இச்சிறு தூண்களைத் தட்டினால் இசை எழுகின்றது.

இந்தக் கோயிலிலுள்ள ஆஞ்சநேயர் சிலை பத்து அடிக்கும் அதிகமான உயரமுடையது.

இக்கோயிலில் வட்டெழுத்து, இப்போதுள்ள தமிழ் எழுத்துக் கல்வெட்டுகள் ஏராளமாக இருக்கின்றன.

இங்குள்ள கைலாசர் கோயிலுக்கு அருகிலுள்ள பாறையே இக்கோயிலின் மிகப் பழைய பகுதி என்று கருதப்படுகிறது. கோயிலுக்கு அருகிலுள்ள தெப்பக்குளமும் அதிலுள்ள மண்டப மும் மிக அழகு வாய்ந்தவை.

கோயிலுள் உள்ள கொன்றைமரம் இரண்டாயிரம் ஆண்டுகள் காலம் நிற்பதாகக் கூறுவர். இது ஆதியில் வில்வ மரமாயிருந்த தாகவும் அதன் அடியில் இருந்த சிவலிங்கத்தை அகஸ்தியர் போன்ற முனிவர்களும், ஆதிசங்கராச்சாரியாரும் வழிபட்டதாக வும் ஐதிகம் கூறும். இங்குள்ள நந்தி வெண்கல்லால் ஆகியது மிகப் பெரியது.

## 18 செஞ்சி

தென்னார்க்காடு மாவட்டத்தின் வடமேற்குப் பகுதியில் திண்டிவனத்திலிருந்து திருவண்ணாமலை செல்லும் சாலையில் உள்ள ஊர். முக்கோணவடிவில் அமைந்த மூன்று மலைகளைக் கொண்டு உருவாகிய கோட்டை ஒன்று இருக்கிறது. மேற்கில் உள்ள இராஜகிரி (800 அடி உயரம்) என்னும் மலை அரண்வலி கொண்டது. வடக்கில் உள்ளது கிருஷ்ணகிரி என்றும், தெற்கில் உள்ளது சந்திரகிரி என்றும் பெயர் பெறும். இம்மூன்று மலைகளை யும் இணைத்து, அறுபதடி அகலம் உள்ளதாக உயரமான அலங்கம் ஒன்று கட்டப்பட்டுள்ளது. அதன் வெளிப்புறத்தில் எண்பதடி அகலமுள்ள அகழியும் இருக்கிறது. இவ்விதம் மூன்று முக்கியக் கொத்தளங்களைக் கொண்டதாக அமைந்திருக்கும். இந்தக் கோட்டையின் சுற்றளவு ஐந்து மைல் ஆகும். கீழ்க் கோட்டைக்கு இரண்டு முக்கிய வாசல்கள் இருந்தன. வடபுறம் உள்ளது வேலூர் வாசல். அல்லது ஆர்க்காட்டு வாசல் எனப் பெறும். கிழக்கே உள்ளது புதுச்சேரி வாசல் எந்த வழியாகக் கோட்டைக்குள் சென்றாலும் இராஜகிரி அலங்கத்தைக் கடந்து செல்ல ஒரே வழிதான் உண்டு. இதுவும் 24 அடி அகலம் 60 அடி ஆழம்கொண்ட ஒரு பெரிய கணவாயைத் தாண்டியே செல்ல வேண்டும். சந்திரகிரி என்பது இம்மும்மலைகளுக்கும் வெளியே யுள்ளது. இதனுச்சியிலும் ஒரு சிறிய கோட்டை உள்ளது.

இராஜகிரியின் உச்சியிலே அரங்கநாதர் கோயில் உள்ளது. கருப்பக்கிருகம் பாழடைந்து விட்டது. கீழ்க்கோட்டையிலே வேங்கடரமணசுவாமி கோயிலும் ஒரு மசூதியும் (சாதத் உல்லா கான் மசூதி-1717-18-ல் கட்டப்பட்டது.) உண்டு. ஒருகாலத்தில் சிற்றரசர்களுக்குத் தலைநகராக விளங்கிய இவ்விடத்தில் அவர்கள் வாழ்ந்த அரண்மனை இப்போது இல்லை. அது இருந்த இடம் மண்மேடாக உள்ளது. எனினும் அரண்மனையின் பிரிவுகளான பல கட்டடங்கள் இருக்கின்றன, கலியாண மகால், உடற்பயிற்சிக் கூடம் தானியக் களஞ்சியம் ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

கோட்டைக்கு இரண்டரைக்கல் தொலைவில் சிங்கவரம் என்னும் ஊர் இருக்கிறது. அவ்விடத்தில் பாறைக் குடைவுக் கோயில் ஒன்று இருக்கிறது. கோட்டைப் பகுதியைச் சிவ செஞ்சி என்றும், சிங்கவரத்தை விஷ்ணு செஞ்சி என்றும், பக்கத்திலுள்ள மேலைச்சேரி என்னும் ஊரைப் பழைய செஞ்சி என்றும் சொல் லுவர். சிங்கவரம் என்பது பல்லவர்களுடைய ஆட்சிக் காலத்தி

லேயே இருந்த ஊர் என்னலாம். அந்நாளிலே அந்தப் பிரதேசம் சிங்கபுர நாட்டில் அடங்கியதாகும். சிங்கபுரம் என்பது சிங்கபுர நாட்டின் முக்கிய ஊர். அதுவே சிங்கவரம் ஆயிற்று. சிலர் செஞ்சி என்பதையும் சிங்கபுரம் என்னும் பெயரடியாகப் பிறந்ததெனச் சொல்லுவர். வேறு சிலர் மலையுச்சியைக் குறிக்கும் சிருங்கி என்பதன் மரூஉ எனக் கொள்வர்.

செஞ்சி கி. பி. 1750—61 காலத்தில் பிரெஞ்சுக்காரர்கள் வசம் இருந்தது. 1761-இல் ஆங்கிலேயர் வசமாகியது கி.பி 1780-இல் ஐதர்அலி அதைத் தாக்கிக் கைப்பற்றினான். அதுவே கடைசிப் போர். மைசூர் யுத்தம் முடிந்து நாளடைவில் பிரிட்டிஷார் வசம் வந்த செஞ்சி அதன் பழம்பெருமையை இழந்தது. இன்றைக்கு அது ஒரு புராதனச் சின்னமாகவே விளங்குகிறது.

## 19 சென்னைப்பட்டினம்

சென்னை என்றும், மதராஸ் என்றும் இரு பெயர்களால் இவ்வூர் வழங்கப்பட்டு வருகிறது. சுமார் 350 ஆண்டுகளுக்கு முன் இப்பொழுது நீதிமன்றக் கட்டடம் உள்ள இடத்தில் சென்னகேசவர் கோயில் ஒன்று இருந்தது. இதைச் சுற்றியிருந்த இடம் சென்னகேசவபுரம் என்று வழங்கப்பட்டது. ஆங்கிலேயர்களுக்கு செயின்ட் ஜார்ஜ் கோட்டையைக் கட்ட இடமளித்த அய்யப்பநாயக்கன், வேங்கடப்பன் ஆகியவர்களின் தந்தை சென்னப்பநாயக்கன் பெயரால் சென்னைப்பட்டினம் என்று அழைக்கப்பட்டதாகத் தெரிகிறது. சென்னைப்பட்டினத்துக்கு வடக்கே மதராஸ் பட்டினம் என்ற கிராமம் இருந்ததாகத் தெரிகிறது. நாயக்கர்கள் தந்த பட்டயத்திலும் இப்பெயர் காணப்படுகிறது. இந்த இரண்டு பட்டினங்களையும் ஒன்று சேர்த்து ஆங்கிலேயர் மதராஸ்பட்டினம் என்ற பெயராலும், தமிழர் சென்னைப்பட்டினம் என்ற பெயராலும் அழைக்கலாயினர்.

மதில் என்ற பெயர் மதராஸ் என மருவியது என்றும், கோட்டையிருந்த இடத்தைச் சந்திரகிரி அரசரின் ஆணைக்கு அடங்கி ஆண்டு வந்த மதுரேசன் என்பவரின் பெயரால் மதராஸ் என்ற பெயர் தோன்றியது என்றும், முஸ்லீம்களின் கல்லூரிக்குப் பெயரான மதரஸா என்ற பெயர் மதராஸ் என மருவியது என்றும் பலவிதக் காரணங்கள் கூறப்படுகின்றன. இவைகளில் எது சரியென்று திட்டமாகச் சொல்லமுடியவில்லை.

சென்னையில் முதலில் குடியேறிய ஐரோப்பியர் போர்ச்சுகீசியரே. இவர்கள் கி. பி 1552-இல் சாந்தோமில் குடியேறி வாணிகம் செய்தனர். ஆறுமுகப்பட்டினத்திலிருந்த (Armogan) ஆங்கிலப் பண்டசாலைக்குத் தலைவராயிருந்த சர்பிரான்ஸிஸ்டே என்பவர் சோழமண்டலக் கரையில் பண்டசாலையமைக்க, கி.பி. 1639 இல் வேங்கடபதிநாயக்கரிடம், மதராஸ் பட்டினத்தில் கோட்டை கட்டிக்கொள்ள அனுமதி பெற்றார். அனுமதி வழங்கப் பெற்ற நிலமாகிய கடலோரத் துண்டு நிலத்தில் கி. பி. 1640-இல் செயின்ட் ஜார்ஜ்கோட்டையைக் கட்டினர். நாளடைவில் சுற்றுப்புறக் கிராமங்களான தொண்டையார் பேட்டை, புரசைவாக்கம், எழுமூர், வியாசர்பாடி, நுங்கம்பாக்கம், பிரம்பூர், புதுப்பாக்கம் முதலியன கம்பெனியாருக்குக் கிடைத்தன. கி. பி. 1641-இல் சென்னை சோழமண்டலக்கரையில் கம்பெனியின் தலைநகரமாயிற்று. கி பி. 1653-இல் தனி மாகாணமாயிற்று.

கி. பி. 1702-இல் ஔரங்கசீபின் படைத்தலைவர் தாவுத்கான் நகரைச் சில வாரங்கள் முற்றுகையிட்டார். கி. பி. 1741-இல் மராட்டியர் தாக்கினர். கி. பி. 1746-இல் பிரெஞ்சுக்காரர்கள் கைப்பற்றினர். இரண்டு ஆண்டுகள் கழித்து ஆங்கிலேயர் வசமாயிற்று. சாந்தோம் கி.பி. 1749-இல் ஆங்கிலேயருக்குக் கொடுக்கப்பட்டது. கி.பி. 1758-இல் மீண்டும் பிரெஞ்சுக்காரர்கள் கைப்பற்றினர். இரண்டு மாதங்களில் மீண்டும் ஆங்கிலேயர்கள் மீட்டனர். கி. பி. 1769-இலும், கி. பி. 1780-இலும் ஐதர்அலி நகரைத் தாக்கினார். கி. பி. 1947 வரை ஆங்கில ஆட்சியில் உட்பட்டிருந்தது. இப்பொழுது தமிழ் நாட்டின் தலைநகரமாய் இருக்கிறது.

## 20 சேலம்

கோயம்புத்தூர் மாவட்டத்தையடுத்துள்ளது சேலம் மாவட்டம். இதன் தலைநகர் சேலம். இம்மாவட்டத்தின் வட பகுதி பீடபூமி. மேற்குப் பகுதி மலைவெளி. கல்ராயன், சேர்வராயன் மேலகிரி, கொல்லிமலை, பச்சை மலை முதலியன முக்கிய மலைகளாகும். நீண்டு வளைந்து செல்லும் அழகிய இம்மலைத் தொடர்களும் ஆங்காங்கே சிதறுண்டு நிற்கும் குன்றுகளும் அவற்றின் உச்சியில் அமைந்துள்ள பண்டைய கோயில்களும் கோட்டைகளும் இம்மாவட்டத்துக்குப் பெருமையளிக்கின்றன.

சேலத்தில் கைத்தறி நெசவு முக்கியத்தொழில். ஆடையைக் குறிக்கும் சேலம் என்ற சொல்லால் பெயர் பெற்ற நகரம் இது. மாம்பழத்துக்குப் பெயர் பெற்ற இடம்.

இம்மாவட்டம் கொங்குநாட்டின் ஒரு பகுதி. கடையெழு வள்ளல்களில் இருவரான அதியமான் நெடுமான் அஞ்சியும், வல்வில் ஓரியும் வாழ்ந்த இடம்.

மேட்டூர் நீர்த்தேக்கம் இருக்கும் இடம்; ஏர்க்காடு மலை வாசத்தலம். மேட்டூர் நீர்த்தேக்கமும், பெண்ணாகரம் நீர் வீழ்ச்சியும், ஏர்க்காடு கரடிக்குகையும் ஏரியும் பார்க்க வேண்டிய இடங்கள்.

## 21 தகடூர்

சேலம் மாவட்டத்திலுள்ள இன்றைய தருமபுரியே பண்டைக் காலத்தில் தகடூர் என்று வழங்கப் பெற்றது. கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய அதியமான் நெடுமான் அஞ்சியின் தலைநகர். தகடூர் மீது சேரன் படையெடுத்துச் சென்ற வரலாற்றைத் தகடூர் யாத்திரை கூறுகிறது. தகடூரில் ஒன்பதாம் பத்தாம் நூற்றாண்டு முதல் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. அக்காலத்து இதனை நுளம்ப பல்லவர்கள் ஆண்டதாகத் தெரிகிறது. 1178 ஆம் ஆண்டிலும் அதற்கடுத்த ஆண்டிலும் மூன்றாம் குலோத்துங்கன் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. பிறகு விஜய நகரக் கல்வெட்டுகளும் கிடைக்கின்றன.

## 22 தஞ்சாவூர்

இவ்வூர் தஞ்சை யெனவும் மருவி வழங்கப் பெறுகிறது. இப் பெயருள்ள மாவட்டம், வட்டம் இவற்றின் தலைநகர். தென்னிந் தியாவின் நெற்களஞ்சியம் என்று போற்றப்படுகிறது. திருமுல்லை வாயில், தரங்கம்பாடி, நாகப்பட்டினம், கோடிக்கரை, அதிவீரராம பட்டினம் முதலிய பல துறைமுகங்கள் தஞ்சை மாவட்டத்தி லுள்ளன.

தஞ்சாவூர் பிற்காலச் சோழர்களுக்கும், மராட்டிய மன்னர் களுக்கும் தலைநகராக இருந்த இடம். புகழ்பெற்ற பிருகதீசுவரர் கோயிலும், சரஸ்வதிமகால் நூல்நிலையமும் இருக்கின்றன.

ஆதியில் குபேரன் இறைவனைப் பூசிக்க இங்குத் தங்கி நகரைக் கட்டினதால் அளகை என்றும், பராசர முனிவரின் தவத்தைக் கெடுத்த தஞ்சன், விஷ்ணுவால் வதையுற்ற போது அவனுக்கீந்த வரத்தால் தஞ்சாபுரி என்றும் பெயர் பெற்ற தென்பர். தஞ்சம் (அடைக்கலம்) என்ற சொல்லிலிருந்து தஞ்சாவூர் என்ற பெயர் பிறந்தது என்பாரும் உளர். இதற்குச்

சான்று பூதத்தாழ்வார், திருமங்கை ஆழ்வார்களால் மங்களா சாசனம் பெற்ற தஞ்சை மாமணிக் கோயிலும், தஞ்சபுரீசுவரர், ஆனந்த வல்லியம்மன், கோடியம்மன் கோயில்களுமாகும்.

தஞ்சாவூர் ஏழு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை பல்லவ ஆட்சியில் அவருடைய சிற்றரசர் முத்தரையர்க்குத் தலைநகராக இருந்தது. பிற்காலச் சோழ வமிசத்திற்கு அடிகோலிய விசயாலயன் (846-880) அதனைப் பெரும்பிடுகு முத்திரையரிடமிருந்து கைப் பற்றினான். இச்செய்தியைத் திருவாலங்காடு செப்பேடு கூறுகிறது (S.I I.iii No. 205). இது முதல் தஞ்சாவூர் விசயாலன், முதலாம் ஆதித்தன். முதலாம் பராந்தகன், முதலாம் கண்டராதித்தன், அரிஞ்சயன், சுந்தரசோழன், மதுராந்தகன், முதலாம் இராசராசன் என்போர் ஆட்சி முடிய சோழப் பேரரசின் தலைநகராக இருந்தது. கங்கைகொண்ட சோழன் என்ற முதல் இராசேந்திரன் (1012-1044) காலத்தில் தலைநகர் மாற்றப்பட்டது. தஞ்சாவூர் பதின்மூன்று-பதினைந்தாம் நூற்றாண்டுகளில் பாண்டியர், ஹொய்சள அரசின் கீழும் 1534 முதல் 1662 வரை விஜயநகர ஆட்சியில் சேவப்பன் (1572), அச்சுதப்பன் (1614), இரகுநாதன், விஜயராகவன் ஆகியவர்களின் தலைநகரமாகவும், பின்னர் மகாராட்டிர வமிசத்தினரின் (1674-1855) தலைநகராகவும் இருந்து, கடைசி சிவாஜி ஆண்சந்ததி இல்லாது இறக்க 1855 இல் ஆங்கில ஆட்சியில் வந்தது.

கோயிற் சிற்பத்திறனுக்கும், சோழர் காலச் சிற்ப அமைதிக்கும் தஞ்சாவூர் இராசராசேசுரமும் மற்றும் நகரில் பொதிந்துள்ள எழுபத்தேழு திருக்கோயில்களும் நிலைக்களமாகும். கட்டடக் கலைக்குச் சோழ, பாண்டிய, நாயக்க, மகாராட்டிர மன்னர்கள் வகுத்த அரண்மனையின் மாடமாளிகைகள் சிறந்த எடுத்துக் காட்டுகள். கல்லிலும் உலோகத்திலும் ஆன சிற்பங்கள் அழியாச் சிறப்புற்றவை சரஸ்வதிமகால் ஒரு அறிவுக் கருவூலம். இசைக் கலைக்கு ஆதரவாக நாயக்கர் சங்கீதமஹாலும், சங்கமிருந்து தமிழாராய்வதற்கு நிலைக்களமாகக் கரந்தைத் தமிழ்ச் சங்கமும், ஓவியக் கலைக்கு இராசராசேச்சுரத்துச் சோழர்—நாயக்கர் காலத்து ஓவியங்களும் சான்றுகள்.

தஞ்சை இராசராசேச்சுரம் முதலாவது இராசராச சோழன் 1003-1009 வரை ஏழு ஆண்டிற்குள் நிறுவியது.

தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக் கழகம் ஒன்று இப்பொழுது நிறுவப்பட்டுள்ளது. இத்தகைய பல்கலைக்கழகம் நிறுவப்படுவது இதுவே முதன் முதலில் நிறுவப்பட்டதாகும்.

## 23 தரங்கம்பாடி

தஞ்சாவூர் மாவட்டத்தில் மாயூரம் வட்டத்தில் மாயூரத் துக்குத் தென் கிழக்கில் பத்தொன்பது மைல் தூரத்தில் இருக்கும் ஒரு பட்டினம். முற்காலத்தில் முக்கியத் துறைமுகமாக விளங்கியது. இங்கு 1620-இல் டேனியர் கோட்டை கட்டினர். இக்கோட்டை 1845-இல் ஆங்கிலேயருக்குக் கிடைத்தது.

பதினைந்தாம் நூற்றாண்டினைச் சார்ந்த கல்வெட்டு ஒன்று (திரிபுவனச்சக்கரவர்த்தி குலசேகரதேவர் S.I.I. iv 399) இவ் வூரினைச் சடங்கன்பாடியான குலசேகரன் பட்டினம் என்று குறிக் கிறது. 17, 18 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுகளும் சடங்கன்பாடி என்றே குறிக்கின்றன. எனவே, இவ்வூரின் பெயர் தரங்கம்பாடி அன்று என்பது பெறப்படுகிறது. தமிழில் ச—த இரண்டும் மயங்கி வரும் ஒலிகளாகும். எனவே சடங்கன்பாடி— தடங்கன்பாடி—தரங்கம்பாடி என மாறியிருக்க வேண்டும்.

## 24 திண்டிவனம்

தென் ஆர்க்காடு மாவட்டத்தின் வடகிழக்கு மூலையில் கடலோரமாக உள்ளது திண்டிவனம் வட்டம். இவ்வட்டத்தின் தலைநகர் திண்டிவனம். திண்டிவனம் என்பது திந்திருணி (புளிய மரம்) வனம் என்ற சொல்லிலிருந்து தோன்றியது என்பர்.

பண்டைக் காலத்தில் இது ஒய்மா நாட்டைச் சேர்ந்திருந்தது. இதைச் சார்ந்த கிடங்கில் என்ற ஊர் முன்னர் அரண் சூழப் பெற் றிருந்தது. அதன் சிதைவுகள் இன்றும் இருக்கின்றன. கிடங்கிலைச் சூழ்ந்திருந்த காவற் காட்டின் ஒரு பகுதியே திண்டி வனம் என்று கூறுகின்றனர்.

## 25 திருக்கச்சூர்

செங்கற்பட்டுக்கு வடக்கில் உள்ள சிங்கப் பெருமாள் கோயி லுக்கு அண்மையிலுள்ளது. திருமால் பாற்கடல் கடையும் போது அமுதந்திரள வேண்டுமென்று வேண்டி ஆமை (கச்சபம்) வடிவம் எடுத்து வழிபட்டபடியால் திருக்கச்சூர் எனவும், தலமரம் ஆலமர மாகையால் ஆலக்கோயில் எனவும் பெயருண்டாயிற்று என்று கூறுவர்.

## 26 திருக்கடவூர்

இவ்வூர் தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ளது. மார்க்கண்டனுக்காக காலனைச் சிவபெருமான் காலாலுதைத்து அழித்த இடம் என்றும், சாவின் அச்சத்தைக் கடக்க அருளும் திருப்பதியாகையால் திருக்கடவூர் எனப் பெயர் பெற்றது என்றும் உரைப்பர். கூற்றுவனை உதைத்த இடமாதலின் நவக்கிரகங்கள் தம் வலியிழந்தன என்ற காரணத்தால் இங்கு நவக்கிரகக் கோயில் இல்லை. இவ்வூரிலுள்ள கோயில் மேற்கு நோக்கிய வாயிலையுடையது. இறைவியின் கோயில் தனியே கிழக்குநோக்கி இருக்கிறது.

இக்கோயிலில் திருச்சிற்றம்பல வேலைக்காரன் திருமண்டபம் என ஒன்றிருந்ததென்றும், திருக்கடவூர் சபையார் இங்குக் கூடுவது வழக்கமென்றும் கூறுவர்.

இக்கோயிலில் முதலாம் இராசராச சோழன் முதலாகப் பல சோழமன்னர்களும், மாலவர்மன் முதலாகப் பல பாண்டிய மன்னர்களும், விசய நகர வேந்தர்களில் கிருஷ்ணதேவராயர், வீரவிருப்பண்ண உடையார் என்போரும் வெட்டிய கல்வெட்டுகள் இருக்கின்றன. இவர்கள் நிவந்தங்கள் அளித்துள்ளனர். நிலங்கள் விடுத்துள்ளனர்.

திருக்கடவூருக்குக் கிழக்கே ஒரு மைல் தொலைவில் திருக்கடவூர் மயானம் என்ற பெயருடன் ஓர் ஊர் உள்ளது. சிவபெருமான் பிரமனை நீறாக்கி மறுபடியும் உயிர்ப்பித்த இடமாதலின் மயானம் என்ற பெயரை அடைந்தது என்பர். இது திருமெய்ஞ்ஞானம் எனவும் வழங்கப்படுகிறது.

## 27 திருக்கடைமுடி

தஞ்சாவூர் மாவட்டத்தில் ஆனந்ததாண்டவபுரம் புகைவண்டி நிலையத்திற்கு வடகிழக்கிலுள்ள திருநின்றியூருக்குத் தென்கிழக்கே நான்கு மைல் தொலைவில் உள்ளது இவ்வூர். இப்பொழுது கீழையூர் என வழங்கப்படுகிறது.

## 28 திருக்கண்டியூர்

தஞ்சாவூருக்கு வடக்கே ஆறு மைலில் உள்ளது இவ்வூர். பிரமன் தலையைக் கொய்த இடம் என்றும், திருமால் அரன் சாபந்தீர்த்த இடம் என்றும் கூறுவர்.

இங்கேயுள்ள கோயிலில் உத்தம சோழன், முதலாம் இராசேந்திர சோழன், கோவிசைய நிருபதுங்க விக்கிரமவர்ம பல்லவன் ஆகியோர் காலக் கல்வெட்டுகள் உள்ளன.

## 29 திருக்கண்ணபுரம்

சோழ நாட்டிலுள்ளது. தஞ்சாவூர் மாவட்டத்தில் நன்னிலம் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே நான்கு மைலில் உள்ளது. வைணவத் திருப்பதி. கண்ணுவர் வழிபட்டதால் இவ்வூர் கண்ணபுரம் என்று பெயர் பெற்றது என்பர்.

## 30 திருக்கரபுரம்

இவ்வூர் கொங்குநாட்டிலுள்ளது. வேம்படிதாளம் புகை வண்டி நிலையத்திற்கு அண்மையிலுள்ளது. கரன் என்பவன் வழி பட்ட ஊராகையால் திருக்கரபுரம் எனப் பெயர் பெற்றதென்பர்.

## 31 திருக்கழிப்பாலை

சோழ நாட்டிலுள்ளது. முதலில் சிதம்பரத்திற்குத் தென் கிழக்கே ஏழு மைலிலிருந்து இவ்வூரின் கோயிலைக் கொள்ளிடம் அடித்துக்கொண்டு போய்விட்டதனால், இக்கோயிலிலுள்ள சிவலிங்கத்தை இப்போது சிதம்பரத்திற்குத் தென்கிழக்கே இரண்டரை மைலிலுள்ள சிவபுரியில் ஒரு தனிக்கோயிலில் வைத்து வழிபடுகின்றனர் என்று கூறப்படுகிறது. இக்கோயிலில் முதலாம் இராசராச சோழன், கங்கை கொண்ட சோழன் ஆகியோர் காலக் கல்வெட்டுகள் உள்ளன.

## 32 திருக்கழுக்குன்றம்

இது தொண்டை நாட்டு ஊர். செங்கற்பட்டுக்குத் தென் கிழக்கில் ஒன்பது மைல் தொலைவில் உள்ளது. கழுகுகள் வழி பட்டுப் பேறுபெற்றதனால் கழுக்குன்றம் எனவும், வேதங்கள் மலையுருவாய் இறைவனை வழிபட்டதனால் வேதகிரி எனவும் பெயர் வந்ததாகக் கூறுவர்.

இப்பொழுதும் இரண்டு கழுகுகள் நாள்தோறும் மலை மீதிருக்கும் கோயிலுக்கு வந்து, குருக்கள் தரும் சர்க்கரைப் பொங்கலையும் நெய்யையும் உண்டு செல்வது வழக்கமாக உள்ளது. இதனால் இதனைப் பட்சிதீர்த்தம் என்றும் சொல்வது உண்டு.

மலையின் கீழுள்ள ஊரில் உள்ள கோயிலின் கிழக்கே சங்கு பிறந்த குளம் ஒன்று இருக்கிறது. இக்குளத்தில்பன்னிரண்டாண்டுக் கொருமுறை ஒரு சங்கு பிறக்கிறது. இத்தீர்த்தத்தில் முழுகிக் குன்றத்தை வலம் வருவது மக்கள் வழக்கம். மலையிலே சிறந்த பச்சிலைகள் இருப்பதால் இத்தலத்திலே பல நாட்கள் தங்கி மலையை வலம் வருவதால் பிணிதீரும் என்பர் மலையின் சுற்றுத் தொலைவு இரண்டரை மைல்.

அந்தகக் கவிவீரராகவ முதலியார் திருக்கழுக்குன்றப் புராணம் பாடியுள்ளார்.

வீரபாண்டியன் காலக் கல்வெட்டில் செயங்கொண்ட சோழ மண்டலத்தில் களத்தூர்க் கோட்டத்துத் திருக்கழுக்குன்றம் எனவும், சோழர் காலக் கல்வெட்டில் களத்தூர்க் கோட்டத்தில் களத்தூர் நாட்டிலுள்ள உலகளந்த சோழபுரம் என்றும் இவ்வூர் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 33 திருக்களர்

சோழ நாட்டிலுள்ளது; திருத்துறைப் பூண்டி புகைவண்டி நிலையத்திலிருந்து மேற்கே ஐந்து மைல் தொலைவிலுள்ளது. துர்வாசர் வழிபட்ட தலம் என்பர். ஆதியப்பன் என்பவர் எழுதிய இவ்வூர்ப்புராணம் அச்சாகியிருக்கிறது.

இவ்வூர்க்கோயிலில் முதலாம் இராசராசன், முதற் குலோத்துங்கன், மூன்றாங்குலோத்துங்கன், மூன்றாம் இராசராசன் முதலான சோழர் காலத்திலும், பாண்டியர் காலத்திலும், விஜய நகர மன்னர் காலத்திலும் வெட்டப்பெற்ற கல்வெட்டுகள் உள்ளன. கல்வெட்டுகளில் இறைவர் முளைத்த நாயனார் என்று குறிப்பிடப் பெற்றுள்ளார்.

## 34 திருக்கற்குடி

சோழ நாட்டிலுள்ளது. திருச்சிராப்பள்ளிக்குத் தென்மேற்கே இரண்டரை மைலில் உள்ளது. கோயில் ஒரு சிறு குன்றின் மேல் இருக்கிறது. மேற்குப் பார்த்த கோயில். இவ்வூர் இப்பொழுது உய்யக்கொண்டான்மலை என வழங்கப்படுவதாகத் தெரிகிறது.

இவ்வூர்க் கோயிலில் முதற் பராந்தகன் முதலாக, முதற் குலோத்துங்கன் வரை பல சோழ அரசர்கள் காலத்தும், மல்லி கார்ச்சுனன் என்னும் மன்னன் காலத்தும் வெட்டப் பெற்ற கல்

வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டுகளில் சதுர்வேதி மங்கலத்துக் கற்குடி எனவும், உறையூர்க் கூற்றத்துக் கற்குடி எனவும், உய்யக் கொண்டான் திருமலை எனவும் இவ்வூர் குறிக்கப் பெற்றுள்ளது.

## 35 திருக்காட்டுப்பள்ளி

இப்பெயருடன் சோழநாட்டில் இரண்டு ஊர்கள் இருக்கின்றன. இவை இருக்கும் திசைகொண்டு கீழைத் திருக்காட்டுப் பள்ளி எனவும், மேலைத் திருக்காட்டுப்பள்ளி எனவும் வழங்கப்படுகின்றன

கீழைத்திருக்காட்டுப்பள்ளி : சீகாழிக்குத் தென்கிழக்கிலே காவிரிப்பூம்பட்டினத்திற்குச் செல்லும் வழியில் திருவெண்காட்டிற்கு அருகில் ஒரு மைலில் உள்ளது. இங்குள்ள கோயில் மேற்குப் பார்த்த வாயிலையுடையது.

மேலைத்திருக்காட்டுப்பள்ளி : தஞ்சாவூருக்கு மேற்கேயுள்ள பூதூர் புகைவண்டி நிலையத்திலிருந்து வடக்கே ஐந்து மைலில் உள்ளது. குடமுருட்டியாற்றின் தென்கரையிலுள்ளது. இங்குதான் காவிரியினின்றும் குடமுருட்டியாறு பிரிகிறது. உறையூர் அரசன் ஒருவன் மனைவிக்கு உற்ற கானல் வெப்பத்தை இவ்வூரில் சிவபெருமான் நீக்கினார் என்று கூறுவர்.

## 36 திருக்காளத்தி

இவ்வூர் சீகாளத்தி என வழங்கப் பெறுகிறது. கண்ணப்ப நாயனார் சிவபெருமானை வழிபட்டு ஆறு நாளில் முத்தியடைந்த ஊர். இவ்வூர்க் கோயிலில் இறைவன் திருமுன்னுள்ள திருவிளக்குகளில் ஒன்று எப்போதும் காற்றால் மோதப் பெற்றாற்போல அசைந்து கொண்டே இருக்கிறதாம். சீ—சிலந்திப்பூச்சி, காளம்—பாம்பு, அத்தி—யானை. இம்மூன்றும் சிவனை வழிபட்டதால் சீகாளத்தியெனப் பெயர்பெற்றதென்பது புராணச்செய்தி.

பழைய கல்வெட்டுகளில் திருமணிக் கங்கையுடைய நாயனார் என்று குறிப்பிடப்பட்டுள்ள மணிகண்டீஸ்வரர் என்னும் சிவபெருமான் கோயில் ஒன்று இங்கு உண்டு. இது பன்னிரண்டாம் நூற்றாண்டில் வீரராசேந்திரனால் கட்டப்பெற்றதென்பர்.

கருணைப்பிரகாசர், சிவப்பிரகாசர், வேலப்ப தேசிகர் ஆகிய மூவரும் பாடிய சீகாளத்திப் புராணமும், வீரைநகர் ஆனந்தக் கூத்தர் பாடிய திருக்காளத்திப் புராணமும், சேறைக் கவிராசர் பாடியதிருக்காளத்தியுலாவும் இத்தலத்தின்சிறப்பைக்கூறுகின்றன.

இவ்வூருக்கு மும்முடிச் சோழபுரம், சீபுரம் என்னும் பழம்பெயர்களும் உள. இக்கோயிலுள்ள ஆயிரக்கால் மண்டபமும், காளி கோபுரமும் கிருஷ்ண தேவராயர் கட்டியவை.

## 37 திருக்குருகாவூர்

இது சோழநாட்டிலுள்ள ஓர் ஊர். இப்பொழுது திருக்கடாவூர் என்று வழங்குகிறது. தஞ்சாவூர் மாவட்டத்தில் சீகாழிக்குக் கிழக்கே நான்கு மைலிலுள்ளது.

## 38 திருக்குறுங்குடி

இது பாண்டிநாட்டிலுள்ள ஓர் ஊர். திருநெல்வேலி புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே இருபத்தாறரை மைல் தொலைவிலுள்ளது. நம்பாடுவான் என்பவர் இத்தலத் திருமாலைக் கைசிகம் என்னும் பண்பாடி வழிபட்டுத் தம்மையுண்ண வந்த ஒரு பிரமராட்சசனை உய்வித்ததலம். குறுகிய வாமனன் திருப்பதியாதலால் குறுங்குடி என்னும் பெயர் வந்தது.

## 39 திருக்கொடுங்குன்றம்

(பிரான்மலை) இது பாண்டி நாட்டிலுள்ள ஓர் ஊர். மதுரைக்கு வடக்கே நாற்பத்திரண்டு மைல் தொலைவிலுள்ளது. இவ்வூர் கோயிலில் தேவசபை என்றொரு மண்டபமிருக்கிறது.

## 40 திருக்கோட்டியூர்

பாண்டி நாட்டிலுள்ள ஓர் ஊர். இராமநாதபுரம் மாவட்டத்தில் சிவகங்கை வட்டத்தில் மானாமதுரை புகைவண்டி நிலையத்திற்கு வடகிழக்கே இருபத்தேழு மைல் தொலைவிலுள்ளது.

## 41 திருக்கோவலூர்

நடுநாட்டு நகர்களில் ஒன்று. தென்னார்க்காடு மாவட்டத்தில் தென்பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ளது. பழைய காலத்தில் மலாடு என்னும் சிறு நாட்டின் தலைநகராக இருந்தது. மலையமான் நாடு என்பதே மலாடு. இந்நாட்டையாண்ட மன்னர்கள் மலாடர் எனப்பெற்றனர். இம்மன்னர்களில் மலையமான் திருமுடிக்காரி சிறந்தவன். கோவல் நகரின் சிறப்பை அகநானூறு 35ஆவது பாடல் குறிக்கின்றது.

சைவ அடியார்கள் அறுபத்துமூவரில் ஒருவரான மெய்ப்பொருள் நாயனார் மலாட மன்னர்களில் ஒருவராக இந்நகரி

லிருந்து அரசாண்டார் என்று பெரியபுராணம் கூறுகிறது. இந்நகரி லரசாண்ட தெய்வீகன் என்னும் அரசனுக்குப் பாரிமகளிரை ஒளவையார் மணமுடித்தாரென்றும் கூறுகின்றனர்.

இவ்வூர் மேலூர், கீழுர் என்னும் இரு பிரிவுகளையுடையது. கீழுரில் வீரட்டம் என்னும் கோயிலுள்ளது. இக் கோயிலிலிருந்து எழுபத்தொன்பது கல்வெட்டுகளின் படிகள் எடுக்கப்பெற்றுள்ளன. அவை பராந்தகன், இராசராசன், இராசேந்திரன், இராசாதி ராஜன், இராசேந்திர தேவன், குலோத்துங்கன் முதலான சோழ மன்னர்களுடையவும், பல்லவர்களுடையவும், இராட்டிரகூடன் கன்னரதேவனுடையவுமான கல்வெட்டுகளாகும். இக்கல்வெட்டு களில் இவ்வூர் ''சயங்கொண்ட சோழ மண்டலத்து மலாடான ஜகந்நாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோவலூர்'' என்று குறிப்பிடுகிறது.

திருக்கோவலூரில் மேலூர் பகுதியில் திருமால் கோயில் ஒன்றுளது.

## 42 திருக்கோளூர்

பாண்டி நாட்டிலுள்ள ஓர் ஊர். திருநெல்வேலி ரெயில் நிலையத்திற்குக் கிழக்கே இருபது மைல் தொலைவில் உள்ளது. நவநிதிகளும் இங்கே ஒளிந்து கொண்டிருப்பதாக அதருமம் குபேர னிடங் கோள் சொல்லியது பற்றிக் கோளூர் எனப் பெயர் வந்தது என்பர்.

## 43 திருச்சிராப்பள்ளி

பண்டைய சோழ நாட்டின் ஒரு பகுதி திருச்சிராப்பள்ளி மாவட்டத்தின், வட்டத்தின் தலைநகர். இந்நகரைச் சுற்றிலும் திருவரங்கம், திருவானைக்கா, உறையூர், பொன்மலை ஆகிய முக்கிய இடங்கள் உள்ளன. மலைக்கோட்டை திருச்சிராப்பள்ளி நகரின் நடுநாயகமாகத் திகழ்கிறது.

நகரத்தின் ஒரு பகுதியாக இருக்கும் உறையூர் முன்னர் இரண் டாம் கரிகாலன் ஆட்சிவரை சோழ அரசர்களின் தலைநகராக இருந்தது.

மூன்று தலைகளையுடைய அசுரன் வழிபட்டதனால் திரிசிர புரம் என்று பெயர் வந்ததாகப் புராணங் கூறும்.

திருஞானசம்பந்தர் தம் தேவாரத்தில் சிராப்பள்ளி என்றே இவ்வூரைக் குறிப்பிடுகிறார். இங்குள்ள குன்றின் மேலுள்ள

பல்லவக் குகையில் 11-ஆம் நூற்றாண்டில் பொறித்த கல்வெட்டிலும் சிராப்பள்ளி என்றே குறிக்கப்பட்டுள்ளது. இப்பெயரே விஜயநகர மன்னர்கள் காலம் வரை கல்வெட்டுகளிலும், இலக்கியங்களிலும் வழங்கி வந்துள்ளது. விஜயநகர மன்னர் காலக் கல்வெட்டுகள் சிலவற்றில் கூட திருச்சிராப்பள்ளி என்று பெயர் கூறப்பட்டுள்ளது.

பள்ளி என்பது சமண சமயத் தொடர்பைக் குறிக்கின்றது. பண்டைச் சமண சமயச் சின்னங்கள் சில இவ்வூரில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவ்வூர்க் குன்றின் மேலுள்ள உச்சிப் பிள்ளையார் கோயிலிலுள்ள பெரிய பாறையின் பின்புறத்தில் ஒரு பாறை முன்னால் சாய்ந்து ஒரு குகையை உண்டாக்கியிருக்கிறது. அக்குகையில் ஆதிகாலச் சமணச் சின்னங்கள் உள்ளன. இந்தப் பாறைக்குக் கீழே பல கற்படுக்கைகள் உள்ளன. சிலவற்றில் கல்தலையணைகளும் காணப்படுகின்றன. இப்படுக்கைகள் நான்கு அடிநீளமும் ஒன்றரை அடி அகலமும் உடையன. கல் தலையணை மீது காணப்படும் சில மங்கிய எழுத்துகள் ஐந்தாம் நூற்றாண்டினவாகத் தெரிகின்றன. அவைகளில் சில அக்காலத்தில் இக்குகையில் தவம் செய்த சமணமுனிவர்களுடைய பெயர்களாய் இருக்கலாம் என்று எண்ணுகின்றனர். இவற்றுள் ஒரு பெயர் சிரா என்பது. அது ஒரு முனிவர் தலைவரது பெயராக இருந்திருக்கலாம். அதனால் இவ்வூருக்குச் சிராப்பள்ளி என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

இந்தக் குகைக்குப் போகும் வழியில் குன்றின் வடசரிவில் 'கூபக்கரி' என்று கி மு.இரண்டாம் நூற்றாண்டின் பிராமி எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளது. ''கிணறுபோல் செல்லும் குகை'' என்பது இதன் பொருள் என்று கூறுகின்றனர். இக்குகைக்குப் போகும் வழியிலுள்ள பாறையில் 'கண்டுஹ்ரு' என்று 2ஆம் நூற்றாண்டு எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. மூன்று இடங்களில் இந்தச் சொல்லுக்குக் கீழே அமிதானம், கததோஷ, கைவிளக்கு என்று பொறிக்கப்பட்டுள்ளன. இரண்டு இடங்களில் தஞ்சாஹர என்றும், சேனாதண்டம் என்றும் காணப்படுகின்றன. கண்டுஹ்ரு என்பது மகேந்திரவர்மனுடைய விருதுகளைத் தெரிவிக்கும் சொற்களில் ஒன்றாய் இருக்கலாம் என்று கூறுகின்றனர். தஞ்சாஹர என்னும் சொல் தஞ்சையைப் பிடித்தவன் என்று பொருள்படும் என்றும், அது மகேந்திரவர்மனுடைய விருதுகளுள் ஒன்று என்றும் கூறுகின்றனர். மகேந்திரவர்மனுடைய தந்தை சிம்ம

விஷ்ணு சோழர்களை வென்றான் என்று வேலூர் பாளையம் செப்பேடுகள் கூறுகின்றன. தஞ்சைமாவட்டத்தில் கஞ்சனூர் என்னும் ஊருக்குச் சிம்மவிஷ்ணு சதுர்வேதி மங்கலம் என்று ஒரு பெயர் இருப்பது மேற்கூறிய கருத்தை வலியுறுத்துகிறது. பல்லவர்களுடைய இந்தக் காலத்திலிருந்தே தொடங்கிய படியால் தஞ்சையை வெல்லத் தந்தையுடன் சென்ற மகேந்திரவர்மன் 'தஞ்சாஹர' என்ற விருதை வைத்துக் கொண்டிருக்கலாம் எனக் கருதுகின்றனர்.

அதே குகையின் கல்தளத்தில், இராசேந்திர சோழனின் முழுப் பெயராக "ஸ்வஸ்தி ஸ்ரீ ராஜேந்திர" என்று 11-ஆம் நூற்றாண்டின் கிரந்த எழுத்தில் காணப்படுகின்றது. அதன் அருகில் அதே காலத்து எழுத்தில் முழு கல்வெட்டு ஒன்று இருக்கிறது "வாதிப் பிரளய பைரவர்" என்பவர் ஒருவர் பலருடன் தர்க்கம் செய்து வென்று, கருநாடக மண்டலத்துக்குப் போய், இந்த ஊருக்கு வந்ததாக ஒரு சமஸ்கிருத சுலோகம் அக்கல்வெட்டில் காணப்படுகிறது. இவர் சமண முனிவரா என்பது தெரியவில்லை. "வாது செய்வோரின் பைரவன்" என்னும் பட்டம் சமணமுனிவர்க்கு உண்டு என்று தெரிகிறது.

மகேந்திரவர்மனுடைய கல்வெட்டுகள் குகைக் கோயிலில் மிகுதியாகக் கிடைக்கின்றன. பல்லவர் காலத்து வரலாற்றுக் குறிப்புகள் பல அவற்றில் உள்ளன.

## 44 திருச்செந்தூர்

இவ்வூர் திருச்செந்தில், சீரலைவாய், செயந்திபுரம் முதலிய பல பெயர்களால் வழங்கப்படுகிறது. இது நெல்லை மாவட்டத்தில் கீழ்க்கடல் ஓரத்தில் அமைந்துள்ளது. திருச்செந்தூர் வட்டத்தின் தலைநகர்.

முருகக்கடவுள் திருக்கோயில் கடற்கரையில் கிழக்கு நோக்கியிருக்கிறது. சூரபன்மன் முதலான அவுணர்கள் தேவர்களுக்கு மிக்க கொடுமை செய்ய, அவர்களை மீட்பதற்காக முருகக்கடவுள் சேனைகளுடன் தங்கியிருந்த பாசறை என்பது புராணச் செய்தி.

திருமுருகாற்றுப்படையில் திருச்சீரலைவாய் எனக் கூறும் பகுதி இவ்வூரைச் சார்ந்ததே. ஆகவே இவ்வூர் இருபது நூற்றாண்டுகட்கு முன்பே சிறந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

திருமால் குடைக்கோயில் பல்லவர் காலத்தது. (ஆறுஏழாம் நூற்றாண்டு) மற்றும் ஐந்து கல்வெட்டுகள் கிடைத்திருக்

கின்றன. அவைகளில் ஒன்பதாம் நூற்றாண்டில் இருந்த வரகுண மாராயன் காலத்து வட்டெழுத்துக் கல்வெட்டுகள் இரண்டு பழையவை.

## 45 திருச்சோபுரம்

(தியாகவல்லி) நடுநாட்டிலுள்ள ஊர். தென்னார்க்காடு மாவட்டத்தில் ஆலப்பாக்கம் புகைவண்டி நிலையத்திற்கு வட கிழக்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது. இவ்வூர் மணல் மேட்டிலிருந்து சுமார் நூறாண்டுகட்கு முன் கண்டு பிடிக்கப்பட்ட தாம். தம்பிரான்கள் இருவர் இத்தலத்தைக் கண்டுபிடித்தார்கள் எனவும், அதனால் தம்பிரான்கள் கண்ட தலம் என இதற்குப் பெயரெனவும் கூறுவர்.

கல்வெட்டுகளில் இங்கே நர்த்தன கணபதி கோயில் இருந்த தாகவும், அதற்குச் சுந்தரபாண்டியன் நிலம் அளித்ததாகவும் குறிப்புளது. இராசராச தேவன். சாரிபுக்த பண்டிதன், மாறவர் மன் சுந்தரபாண்டியன் ஆகியோர் பெயர்கள் கல்வெட்டிற் காணப் பெறுகின்றன.

## 46 திருச்சோற்றுத்துறை

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூலிருந்து வடக்கே திரு வையாற்றுக்குப் போகும் வழியில் உள்ள கண்டியூருக்குத் தென் கிழக்கே ஒன்றரைமைல் தொலைவிலுள்ளது.

அருளாளன் என்னும் மறையவன் பசிக்குச் சிவபெருமான் எடுக்குந்தோறும் குறையாத சோறு அளித்த ஊராகையால் சோற்றுத்துறை என்று பெயர் பெற்றது என்பது புராணம் கூறும் செய்தி. ஊருக்குத் தெற்கே சோறுடையான் வாய்க்கால் என்று ஒரு வாய்க்கால் இருக்கிறது.

இவ்வூரைப் பற்றிய கல்வெட்டுகள் பராந்தகன், முதலாம் இராசராசன், கோனேரின்மை கொண்டான், குலோத்துங்கன் முத லானோர் காலத்தனவாகக் காணப் பெறுகின்றன.

## 47 திருத்தினை நகர்

இப்பொழுது தீர்த்தனகிரி என்று வழங்கப்படும் இவ்வூர் நடு நாட்டிலுள்ளது. தென்னார்க்காடு மாவட்டத்தில் பரங்கிப் பேட்டை புகைவண்டி நிலையத்திலிருந்து வடமேற்கே ஏழு மைல் தொலைவிலுள்ளது. பெரியான் என்னும் பள்ளன் ஒருவனுக் காகச் சிவ பெருமான் தினை விளையும்படி செய்தாராம்.

48 திருத்தெங்கூர்

இது சோழநாட்டிலுள்ள ஓர் ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவாரூருக்குத் தெற்கே பத்து மைல் தொலைவில் உள்ளது.

சுந்தரர் தேவாரத்திலும் தலபுராணத்திலும் "திருத்தேங்கூர்" என்று இவ்வூர் வழங்கப் பெறுவதால் இதுவே சரியான பெயராக இருக்க வேண்டும்.

49 திருத்தேவூர்

இது சோழ நாட்டிலுள்ள ஓர் ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் நாகப்பட்டினத்திற்கு மேற்கே ஏழு மைல் தொலைவிலுள்ள கீழ்வேளூர் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே இரண்டு மைலிலுள்ளது.

இவ்வூர்க் கோயிலில் சடாவர்மன் சுந்தர பாண்டிய தேவர் விசயநகர வேந்தரான தேவராய மகாராயர் காலக் கல்வெட்டுகள் உள்ளன. கல்வெட்டுகளில் இறைவர் ஆதித்தீச்சரமுடையார் என்றும், கோயில் ஆதித்தீச்சரம் என்றும் உள்ளன. இவ்வூர் அருமொழி தேவ வளநாட்டைச் சார்ந்தது.

50 திருநல்லம்

இது சோழ நாட்டிலுள்ள ஓர் ஊர். கோனேரி ராஜபுரம் என்று வழங்கப்படுவது. தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவிடைமருதூருக்குத் தென்கிழக்கே ஆறு மைல் தொலைவில் உள்ளது. கோயில் மேற்குப் பார்த்த வாயிலையுடையது.

இவ்வூர்க் கல்வெட்டுகளில் இக்கோயிலைக் கண்டராதித்தன் மனைவியார் செம்பியன் மாதேவியார் கருங்கற்பணியாகக் கட்டினார் என்றிருக்கிறது.

51 திருநல்லூர்

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் சுந்தரப்பெருமாள் கோயில் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. இவ்வூர்க்கோயில் கல்வெட்டுகளில் முதல் இராசராசன் காலத்தில் இவ்வூர் பஞ்சவன் மாதேவி சதுர்வேதி மங்கலம் என்றிருக்கிறது.

52 திருநள்ளாறு

இது சோழ நாட்டிலுள்ள ஊர். காரைக்காலுக்கு மேற்கே மூன்று மைல் தொலைவில் உள்ளது. இவ்வூர்க் கோயிலிலுள்ள

இலிங்கத்தின் வடிவம் தருப்பைக் கொழுந்துகள் சேர்ந்தாற் போலிருக்கிறது. சம்பந்தர் மதுரையில் சமணருடன் வாது செய்த போது இத்தலப்பதிகத்தையே நெருப்பிலிட்டார் எனக் கூறுகின்ற னர். சனி பகவான் கோயில் சிறப்புடைய ஊர்.

கல்வெட்டுகளில் இவ்வூர் உய்யக்கொண்டார் வளநாட்டு முழையூர் நாட்டில் இருந்ததாகக் கூறப்படுகிறது.

## 53 திருநறையூர்

நாச்சியார் கோயில் என வழங்கப்படும் இவ்வூர் சோழநாட்டி லுள்ளது. தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே ஆறு மைல் தொலைவிலுள்ளது.

## 54 திருநாகேச்சுரம்

இது சோழ நாட்டிலுள்ள ஒரூர். தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்குக் கிழக்கே நான்கு மைல் தொலைவிலுள்ளது. இதற்குச் சண்பகாரணியம் என்று ஒரு பெயரும் உண்டு எனத் தெரிகிறது சேக்கிழாருக்கு மிக விருப்பமான ஊர் என்பது, அவர் தம்முடைய ஊராகிய குன்றத்தூரிலே ஒரு கோயில் கட்டித் திரு நாகேச்சுரம் என்று பெயர் வைத்ததிலிருந்து தெரிகிறது.

கல்வெட்டுகளில் பத்து, பதினோராம் நூற்றாண்டில் உய்யக் கொண்டான் வளநாட்டுத் திரைமூர் நாட்டுத் திருவிண்ணகர் திரு நாகேசுரம் என்று இவ்வூர் வழங்கியதாகக் காணப்பெறுகிறது.

## 55 திருநாரையூர்

சோழநாட்டிலுள்ள ஒரூர். தென்னார்க்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திற்குத் தென்மேற்கேயுள்ள குமராட்சிக் கருகிலுள்ளது. சிதம்பரத்தில் சேமித்து வைத்திருந்த தேவாரத்திற்கு முறைகளை நம்பியாண்டார் நம்பி வாயிலாக வெளிப்படுத்திய பொல்லாப் பிள்ளையார் எழுந்தருளியிருக்கும் ஊர்.

## 56 திருநாவலூர்

நடுநாட்டில் உள்ள ஊர். நாவல் மரத்தைத் தலவிருட்சமாக உடைமையால் இவ்வூருக்குத் திருநாவலூர் என்ற பெயர் உண்டா யிற்று என்பர். சுந்தரமூர்த்தி நாயனார் அவதரித்த இடம். இவர் பிறந்த வீடு இருந்த இடத்தில் இப்பொழுது ஒரு பஜனை மடம் இருக்கிறது. திருவெண்ணெய் நல்லூர் இராசப்ப நாவலர் பாடிய புராணம் ஒன்று இவ்வூருக்கு இருக்கிறது.

## 57 திருநெடுங்களம்

சோழ நாட்டில் உள்ள ஊர். திருச்சிராப்பள்ளிக்குக் கிழக்கே உள்ள திருவெறும்பியூர் ரெயில் நிலையத்திற்குக் கிழக்கே ஏழு மைல் தொலைவில் உள்ளது.

## 58 திருநெல்லிக்கா

சோழ நாட்டிலுள்ள ஓர் ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவாரூருக்குத் தெற்கே எட்டு மைல் தொலைவிலுள்ளது. இவ்வூர்க் கோயிலிலுள்ள சிவலிங்கத்தின் மீது ஐப்பசியில் தேய் பிறையில் சதுர்த்தசி முதல் ஏழு நாளும், மாசியில் பதினெட்டாம் நாள் முதல் ஏழு நாளும் ஞாயிறு மறையும் போது ஞாயிற்றின் கதிர்கள் விழும். பிரகாரத்தில் உள்ள நெல்லி மரத்தின் காய்களை இறைவருக்கு மட்டும் பயன்படுத்துகிறார்கள்.

## 59 திருநெல்வேலி

அதே பெயருள்ள மாவட்டத்தின் வட்டத்தின் தலைநகர் இவ்வூர் வேத சருமா என்னும் அந்தணன் உலர்த்தி வைத்திருந்த நெல்லை வெள்ள மடித்துப் போகா வண்ணம் வேலியிட்டுச் சிவ பிரான் காத்ததனால் இப்பெயர் வந்தது என்று புராணம் கூறு கிறது.

தாம்பிரபருணி ஆற்றின் வடக்கிலும் தெற்கிலும் தேரி எனப் படும் மணல் மேடுகள் காணப்படுகின்றன. இங்கே படிகக்கல் சிறு கருவிகளும், வட்டுக்கல் ஆயுதங்களும், சிறுவெட்டுக் கருவிகளும், பலவிதமான கூரிய கருவிகளும் கிடைத்துள்ளன. இவைகளைக் கூர்ந்து ஆய்ந்தால் இந்தத் தேரித்தொழில் கி. மு. 6000 முதல் கி.மு 1000வரை நடந்து வந்துள்ளதாகத் தெரிகிறது. தாம்பிரபருணி ஆற்றின் தென்கரையிலுள்ள ஆதிச்சநல்லூரில் முதுமக்கள் தாழிகள் கிடைத்துள்ளன. இத்தாழிகள் பெரியன. ஒரே கால் உடையன நீண்டவை. தடித்த சிவந்த உருண்டையான பானைகள், ஒருகஜத் துக்கும் குறைந்த விட்டமும் அதிலும் சற்றுக் கூடிய உயரமும் உடையன, சில தாழிகளில் மனிதன் சட்டகத்தின் எலும்புகள் அனைத்தும் கிடைத்துள்ளன. மற்றவற்றில் சில எலும்புத் தொகுதிகள் மட்டும் கிடைக்கின்றன.

தாழிகளின் அகத்தும் புறத்தும் நன்கு செய்த பலவகையான கலங்களும், பல இரும்புக் கருவிகளும், ஆயுதங்களும், வெண்கலக் கலங்களும், நகைகளும், கயிற்றில் கோத்த தங்க நகைகளும் சில

நவரத்தின மணிகளும், பெட்டிகளும், அம்மி போன்ற கல் கருவி களும் ஏராளமாகக் காணப்படுகின்றன.

திருநெல்வேலி நகரிலுள்ள சிவன் கோயிலிலும், அம்மன் கோயிலிலும் பத்தாம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் உள்ளன.

## 60 திருப்பத்தூர்

வடஆர்க்காடு மாவட்டத்தில் திருப்பத்தூர் வட்டத்தின் தலைநகர்.

இதே பெயருடன் இராமநாதபுரம் மாவட்டத்திலும் ஒரு வட்டம் உள்ளது. அதன் தலைநகரமும் திருப்பத்தூரே.

## 61 திருப்பந்தணை நல்லூர்

இது சோழ நாட்டிலுள்ள ஓர் ஊர். தஞ்சை மாவட்டத்தில் திருவிடை மருதூர் புகைவண்டி நிலையத்திற்கு வடகிழக்கில் ஏழரை மைல் தொலைவில் உள்ளது.

இவ்வூரிலுள்ள கோயிலில் முதலாம் இராசராசன் முதல் மூன்றாம் இராசராசன் வரையில் சோழ மன்னர்கள் காலத்திலும், விசயநகர வேந்தர்களின் காலத்திலும் வெட்டப் பெற்ற கல் வெட்டுகள் இருக்கின்றன. ஒரு கல்வெட்டில் இவ்வூர் 'வடகரை விருதராச பயங்கர வளநாட்டுவிளத்தூர் நாட்டுபந்தணை நல்லூர் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. முதற் கோபுரத்து வாயிலின் வடபால் சுவரில் காலிங்கன் எல்லனைப் புகழ்ந்த பாடல்கள் இருக் கின்றன.

## 62 திருப்பரங்குன்றம்

மதுரை மாவட்டத்தில் மதுரை நகருக்குத் தென்மேற்கில் உள்ளது. உயர்ந்த தனிப்பாறைக் குன்றும், அதனைச் சுற்றிச் சுற்றாலைப் பாதையும், வடபுறமாகக் கோயிலும் ஊரும், இரண்டு பெரிய ஏரிகளும் உண்டு.

இங்குள்ள கோயிலின் மூலத்தானம் ஒரு பண்டைய குடை கோயில். திருவுருவங்கள் பாறையிலேயே ஆக்கப் பெற்றிருக் கின்றன. இக்கோயில் சிற்ப வகையில் பல்லவர் காலத்தது (ஆறு, ஏழாம் நூற்றாண்டு).

முருகக்கடவுள் சூரபன்மனை வதைத்த பிறகு தென்னாட் டிற்குத் திரும்பியதும் திருச்செந்தூரிலிருந்து திருப்பரங்குன்றம் வந்து வீற்றிருந்தார். இங்கே தெய்வயானையை மணம் புரிந்தார் என்பது புராணம்.

இருபது நூற்றாண்டிற்கு முன் இக்குன்று சமண குரவர்கள் தங்கியிருந்த எட்டுக் குன்றுகளில் ஒன்றாக இருந்தது. சமணர் தவம் புரிந்த இடங்கள் இங்கு உண்டு. சம்பந்தப்பெருமான் (ஏழாம் நூற்றாண்டு) இத்தலத்தைப் பற்றிப் பாடியிருக்கின்றார். பல்லவர் ஆட்சியிலும் பாண்டியிலும் இக்கோயில் சிறந்திருந்தது. முஸ்லீம் ஆட்சியில் மலைமேல் ஒரு பள்ளி வாசல் ஏற்பட்டது.

திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் இக்குன்றைப் பாடியுள்ளார்.

## 63 திருப்பராய்த்துறை

சோழ நாட்டிலுள்ள ஓர் ஊர். திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே பத்து மைலில் உள்ளது. இவ்வூரிலுள்ள கோயிலில் பராய் மரங்கள் நிறைந்திருந்தனவாதலின் இவ்வூர் இப்பெயரைப் பெற்றது.

இங்குக் கல்வி, சமயம் ஆகிய துறைகளில் பணியாற்றும் ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம் என்ற ஒரு நிறுவனம் உள்ளது.

## 64 திருப்பழனம்

சோழ நாட்டிலுள்ள ஓர் ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவையாற்றிற்குக் கிழக்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது. அப்பூதியடிகளின் தொண்டைச் சிறப்பித்து அப்பர் பாடிய திருப் பதிகத்தையுடையது. இவ்வூருக்கு அருகில் அப்பூதியடிகளின் திங்களூர் இருக்கிறது.

முதற் பராந்தகன் முதலாக மூன்றாம் குலோத்துங்கன் வரை பல சோழர்களுடைய கல்வெட்டுகள் இவ்வூர்க் கோயிலில் இருக்கின்றன.

## 65 திருப்பாசூர்

தொண்டை நாட்டிலுள்ள ஊர். செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த திருவள்ளூர் புகைவண்டி நிலையத்திற்கு வடமேற்கே நாலரை மைலில் உள்ளது.

கரிகாற் சோழனுக்கு அவன் எதிரியான ஒரு மன்னன் சமணர்களோடு ஆலோசித்துக் குடத்திலிட்டு அனுப்பிய பாம்பை இங்குள்ள சிவபெருமான் எடுத்து ஆட்டியதாகத் திருநாவுக்கரசர் தேவாரத்தில் கூறியுள்ளார்.

இவ்வூர்க் கோயிலிலுள்ள கல்வெட்டில் 'தொண்டை மண்டலத்து ஈக்காடு கோட்டத்துக் காக்கலூர் நாட்டுத் திருப்

பாகூர்' என இவ்வூர் குறிக்கப் பெற்றிருக்கிறது. இராசராசன், குலோத்துங்கன், வீரகம்பணன் ஆகியோர் காலக் கல்வெட்டுகள் உள்ளன.

## 66 திருப்பாதிரிப்புலியூர்

நடுநாட்டிலுள்ள ஊர். தென்னார்க்காடு மாவட்டத்தின் தலைநகரான கூடலூருக்கு வடக்கே மூன்று மைல் தொலைவி லுள்ளது.

புலிக்கால் முனிவர் வழிபட்டதனால் இவ்வூர் புலியூர் எனப் பட்டதாம். சாபத்தினால் முடமான முயலுருப்பெற்ற மங்கணர் என்ற முனிவர் வழிபட்டுச் சாபம் நீங்கப் பெற்றாராம். திருநாவுக் கரசு நாயனாரைச் சமணர்கள் கல்லோடு கட்டிக் கடலில் தள்ளிய போது 'சொற்றுணைவேதியன்' என்ற தேவாரம் ஓதிக் கரை யேறிய ஊர் இது. அந்த இடம் கரையேறவிட்ட குப்பம் என வழங்கப்படுகிறது. தல விருட்சம் பாதிரி.

இலக்கணம் சிதம்பரநாத முனிவர் இயற்றிய தலபுராணமும், தொல்காப்பிய முனிவரியற்றிய கலம்பகமும் இவ்வூருக்கு உண்டு. இவ்வூர்க் கோயிலில் பத்தாம் நூற்றாண்டு முதல் பதின்மூன்றாம் நூற்றாண்டு வரை பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள் உள்ளன. அக்கல்வெட்டுகளில் இக்கோயிலுக்குப் பல பணிகள் செய்தவர் களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

## 67 திருப்பாம்புரம்

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் பேரளம் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கே மூன்று மைல் தொலைவில் உள்ளது.

இவ்வூர்க் கல்வெட்டுகள் இராசராசன், இராசேந்திரன், திரி புவன வீரதேவன், மூன்றாங் குலோத்துங்கன், சுந்தரபாண்டியன், சரபோஜி மன்னர்கள் காலத்தன. சரபோஜி மன்னரின் பிரதிநிதி யான சுபேதார் ரகுபண்டித ராயன் என்பவனால் வசந்த மண்டபம் கட்டப்பெற்றது. வறுமையால் வாடிய ஒரு வேளாளன் தன் இரு பெண்களை நூறு பொற்காசுக்கு அடிமையாக விற்றதாக ஒரு கல் வெட்டுக் கூறுகிறது. கல்வெட்டில் இவ்வூர் 'உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருப்பாம்புரம்' என குறிக்கப் பெற்றுள்ளது.

## 68 திருப்பாலைத்துறை

சோழ நாட்டிலுள்ள ஓர் ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் பாபநாசம் புகைவண்டி நிலையத்திலிருந்து வடகிழக்கே ஒரு மைல் தொலைவில் உள்ளது.

தாருகாவன முனிவர் விடுத்த புலியைச் சிவபெருமான் உரித்து அதன் தோலைத் தரித்த ஊராம்.

## 69 திருப்பாற்கடல்

திருமால் எழுந்தருளியிருக்கும் நூற்றெட்டுத் திவ்ய தேசங்களுள் ஒன்று.

''செங்கட்காரி கருங்கண் வெள்ளை பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்'' என்ற பரிபாடல் (3, 81-82) பகுதியும், ''பாடிமிழ் பாப்பகத்து அரவணை அசைஇய, ஆடு கொள் நேமியான் பரவுதும்''— என்ற கலித்தொகை (105) பகுதியும் இவ்வூரின் சிறப்பைக் கூறுவன.

## 70 திருப்புட்குழி

தொண்டை நாட்டிலுள்ள ஊர். செங்கற்பட்டு மாவட்டத்தில் காஞ்சீபுரம் புகைவண்டி நிலையத்திற்குத் தென்மேற்கே ஐந்து மைல் தொலைவில் உள்ளது.

புள்ளைக் குழியிலிட்டு மூடியது போல் திருமால் காட்சி தரும் இடமாதலால் இவ்வூருக்குப் புட்குழி என்ற பெயர் வந்த தென்பர்.

## 71 திருப்புத்தூர்

பாண்டிநாட்டிலுள்ள ஊர். காரைக்குடி புகைவண்டி நிலையத்திலிருந்து பன்னிரண்டு மைல் தொலைவிலுள்ளது. வயிரவர் சந்நிதி இங்குச் சிறப்புடையது.

இவ்வூர்க் கோயில் கல்வெட்டுகளிலிருந்து திருஞானசம்பந்தர் திருமடம், திருத்தொண்டத்தொகைத் திருமடம் என்பவை இருந்தன என்று தெரிகிறது. மற்றும் சம்பந்தர் மடத்தில் ஸ்ரீ கண்ட சிவாசாரியார் இருந்தாரென்பதும் தெரிகிறது. மாறவர்மன் சுந்தரபாண்டியன், பராக்கிரமபாண்டியன், குலசேகரபாண்டியன், மாறன்சடையன், வீரபாண்டியன் ஆகியோர் காலக் கல்வெட்டுகள் புலு செய்திகளை அறிவிக்கின்றன.

## 72 திருப்புல்லாணி

இராமநாதபுரத்திற்குத் தெற்கே ஆறுமைல் தொலைவிலுள்ள ஓரூர். திருப்புல்லணை, தருப்பாசயனம் எனவும் பெயருண்டு.

இராமபிரான் இராவணனோடு போர் புரியச் சென்றபோது இலங்கைக்குச் செல்ல கடல் கடக்க வேண்டியிருந்ததால் வழிவிடும் ட்டி வருணனை வேண்டித் தருப்பையில் ஏழு நாள் அளவும் பிரா யோப வேசமாகக் கிடந்த தலமாதலின் தருப்பாசயனம் எனப் பெயர் பெற்றதாம்.

இராமபிரான் ஏழுநாள் தவமிருந்தும் வருணன் வராமையால் சினந்து கடல் மீது அம்புவிட நினைத்தபோது, வருணன் அஞ்சி வந்து, இராமன் விரும்பியவாறே வழிவிட, இராமன் வருணன் பிழையைப் பொறுத்து அவனுக்கு வரம் அருளிய இடம் இது என்றும் கூறுகின்றனர்.

## 73 திருப்புறம்பயம்

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருப்பின்னம்பருக்கு வடக்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது.

பிரளயத்திலும் அழியாமல் புறம்பாய் இருந்ததனால் புறம் பயம் என்று பெயர் வந்ததாம். ஒரு வணிகக் கன்னியின் நிமித்தம் அவளுக்குக் குறித்திருந்த கணவன் பாம்பு கடித்திறக்க, அவனைச் சம்பந்தர் பதிகம் பாடி உயிர்ப்பித்த இடம் இது. இக்கோயில் விநாயகர் வெள்ளை நிறத்தினர்.

இக்கோயிலிலுள்ள கல்வெட்டுகளில் இவ்வூர் இராசேந்திர சிம்ம வளநாட்டு அண்டாற்றுக் கூற்றத்தில் உள்ளதாகக் குறிப் பிடப்பட்டிருக்கிறது. முதற் பராந்தகன் காலக் கல்வெட்டில் ஆதித்தேச்சுரம் என்று இக்கோயிலின் பெயருள்ளது.

## 74 திருப்புன்கூர்

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள வைத்தீசுவரன் கோயில் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கே மூன்று மைல் தொலைவிலுள்ளது.

திருநாளைப் போவார் இறைவரை நேரே கண்டு வணங்க நந்தி விலகிய தலம். கலிக்காம நாயனாருக்காகச் சிவபெருமான் ஈரறுவேலி இருமுறை கொண்டு, பஞ்சத்தால் வாடிய உயிர்களைத் தூக்க மழை பெய்வித்த தலம்.

இவ்வூர்க் கோயிலிலுள்ள கல்வெட்டுகளில் கோப்பெருஞ் சிங்கன் இரண்டாம் ஆட்சி ஆண்டில் இவ்வூர் "இராசாதி ராச வளநாட்டுத் திருவாலி நாட்டுத் திருப்புன்கூர்" என உள்ளது.

## 75 திருப்புனவாயில்

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள அறந்தாங்கி புகைவண்டி நிலையத்திலிருந்து முப்பது மைல் தொலைவில் உள்ளது.

இவ்வூர்க்கோயிலிலுள்ள இலிங்கத்திற்கு மூன்றுமுழ உடையும், ஆவுடையாருக்கு முப்பதுமுழ உடையும் வேண்டும். "மூன்று முழமும் ஒருசுற்று; முப்பது முழமும் ஒருசுற்று" என்னும் புழமொழி இதனைப் பற்றியே வழங்குகிறதென்பர்.

இக்கோயிலிலுள்ள கல்வெட்டில் இவ்வூர் முத்தூர்க் கூற்றத்தில் இருந்ததாகத் தெரிகிறது.

## 76 திருப்பூந்துருத்தி

சோழ நாட்டிலுள்ள ஓரூர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருக்கண்டியூருக்கு மேற்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது.

சோழ மன்னர் ஒருவர் துருத்தியை வைத்து வழிபடச் செய்ததனால் இப்பெயர் வந்ததாம். அப்பர் ஒரு மடம் கட்டிப் பல திருத்தாண்டகங்களும், திருஅங்கமாலை முதலிய பதிகங்களும் பாடிக் கொண்டிருந்த தலம்.

## 77 திருப்பூவணம்

பாண்டி நாட்டிலுள்ள ஊர். மதுரைக்குக் கிழக்கே பன்னிரண்டு மைல் தொலைவில் உள்ளது.

பொன்னனையாள் என்னும் தாசிக்காக இறைவர் சித்தராக வந்து இரசவாதஞ் செய்து கொடுத்த பொன்னைக் கொண்டு அவள் சிவபெருமானுடைய திருவுருவமமைத்து மகிழ்ந்த தலம் என்று திருவிளையாடற் புராணம் கூறுகிறது. தமிழ்நாட்டு மூவேந்தரும் இத்தலத்திற்கு வந்து வணங்கியிருக்கின்றனர்.

## 78 திருப்பெண்ணாகடம்

நடுநாட்டிலுள்ள ஊர். தென்னார்க்காடு மாவட்டத்தில் விருத்தாசலத்திற்குத் தென்மேற்கிலுள்ளது.

தேவப்பெண்களும், காமதேனுவும் வெள்ளையானையும் வழி பட்டதனால் இப்பெயர் வந்ததென்று புராணம் கூறுகிறது. (பெண் + ஆ + கடம்)

கல்வெட்டில் பரகேசரி இராசேந்திரன் காலத்தில் இவ்வூர் 'வடகரை இராசாதிராச வளநாட்டு மேற்கா நாட்டுப் பிரமதேய மான முடிகொண்ட சோழ சதுர்வேதிமங்கலம்' என்று குறிப்பிடப் பெற்றிருக்கிறது.

## 79 திருப்பெருந்துறை

பாண்டிநாட்டிலுள்ளது. தஞ்சைமாவட்டத்தில் அறந் தாங்கியிலிருந்து கிழக்கே பன்னிரண்டு மைல் தொலைவில் உள்ளது.

மாணிக்கவாசகர் இங்கே வந்து குதிரை வாங்கத் தாம் கொணர்ந்த பொருளைக் கொண்டு ஆலயத் திருப்பணி செய்து இறைவன் குருமூர்த்தியாக எழுந்தருளி உபதேசம் செய்த ஊர் இது என்று சொல்லப்படுகிறது.

இவ்வூர் ஆவுடையார் கோயில், ஆளுடையார் கோயில் என இரண்டு விதமாகப் பெயர் பெறுகிறது.

இவ்வூரிலுள்ள கோயில் பெரியது. மிகவும் அருமையான சிற்ப அமைப்புக்களையுடையது இங்குள்ள கொடுங்கைகள் சிற்பக் கலைத் திறமையை நன்கு எடுத்துக்காட்டுபவை. சிற்பிகள் ஏதேனும் திருப்பணிக்கு ஒப்பந்தம் செய்து கொண்டால், "ஆவுடையார் கோயில் கொடுங்கையைத் தவிர மற்ற எதைப் போலவும் அமைப்போம்" என்று எழுதுவது வழக்கமாம்.

இவ்வூர்க் கோயிலில் இறைவனும் அம்பிகையும் அருவமாக உள்ளனர் என்றும், அதனால் பீடங்களுக்கே பூசை நடைபெறு கின்றது என்றும் கூறுகின்றனர்.

இவ்வூர் மிழலைக் கூற்றத்தைச் சார்ந்ததென்று கல்வெட்டு கூறுகிறது.

இவ்வூருக்கு வடக்கேயுள்ள வடக்கூருக்குச் செல்லும் வழியில் ஒரு மண்டபம் இருக்கிறது. அதை "ஆளுடைய பரம சாமியார் பள்ளிக்கூடம்" என்று செப்புப் பட்டயம் கூறுகிறது. அங்கே ஆன்மநாதர் வேத ஆசிரியராக எழுந்தருளி, முந்நூற்றுவருடைய பிள்ளைகளுக்கு வேதம் ஓதுவித்ததாக ஒரு ஐதிகம் வழங்குகிறது.

80 திருப்பேர்நகர்

சோழ நாட்டிலுள்ள ஊர். கோவிலடி என்று வழங்குகிறது. தஞ்சாவூர் மாவட்டத்தில் பூதலூர் புகைவண்டி நிலையத்திற்கு வடமேற்கே ஆறு மைல் தொலைவில் உள்ளது.

81 திருப்பேரை

பாண்டி நாட்டிலுள்ள ஊர். தென்திருப்பேரை என்று வழங்குகிறது. திருநெல்வேலி புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே இருபத்து நான்கு மைல் தொலைவில் உள்ளது.

82 திருப்பைஞ்ஞீலி

சோழநாட்டிலுள்ள ஊர். திருச்சிராப்பள்ளிக்கு வடமேற்கே பதினொரு மைல் தொலைவில் உள்ளது.

பசியால் வருந்திய அப்பருக்குச் சிவபெருமான் கட்டமுது கொடுத்தருளியதாகக் கருதப்படும் தடாகமும் தோட்டமும் இத் தலத்திற்குத் தெற்கே முக்கால் மைலில் உள்ளன. பைஞ்ஞீலி பசிய வாழை. கோயிலில் வாழைமரம் இருக்கிறது. இவ்வாழை இறைவனுக்குப் பயன்படுகிறது.

இக்கோயிலில் முதலாம் இராசேந்திரன், முதலாம் இராசாதி ராசன், திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராசன், திரிபுவனச் சக்கர வர்த்தி கோநேரின்மை கொண்டான் ஆகியவர் காலக் கல்வெட்டு கள் உள்ளன. இராசேந்திரன் காலக் கல்வெட்டிலே, 'இராசேந்திர சிங்க வளநாட்டுத் தனியூர் திருவெள்ளறை திருப்பைஞ்ஞீலி' எனவும், மற்றையோர் கல்வெட்டுகளில் 'இராசாதிராச வளநாட்டு வடவழி நாட்டுத் திருப்பைஞ்ஞீலி', ''இராசராச வளநாட்டு வடவழி நாட்டுத் திருப்பைஞ்ஞீலி'' எனவும் இவ்வூர் கூறப்படுகிறது.

83 திருமங்கலக்குடி

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவிடை மருதூருக்கு வடகிழக்கே மூன்றரை மைல் தொலைவில் உள்ளது.

84 திருமணஞ்சேரி

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் குற்றாலம் புகைவண்டி நிலையத்திற்கு வடகிழக்கில் சுமார் ஐந்து மைல் தொலைவில் உள்ளது.

ஒரு மங்கையின் வயிற்றில் ஆமையாகப் பிறந்த ஒருவன் சிவபெருமானை வழிபட்டு மனிதனாகித் தன் தாயின் ஒப்பந்தப் படி மற்றொருத்திக்குப் பிறந்திருந்த பெண்ணை மணந்த இடம் என்று கூறுகின்றனர்.

85 திருமருகல்

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருப் புகலூருக்குத் தென்கிழக்கே மூன்றரை மைல் தொலைவில் உள்ளது. பாம்பு கடித்திறந்த வணிகனைத் திருஞானசம்பந்தர் திருப்பதிகம் பாடி உயிர்ப்பித்த தலம்.

86 திருமழபாடி

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருநெய்த்தானத்திற்கு வடமேற்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது.

இவ்வூர்க் கோயிலில் முதலாம் இராசராசன் முதல் மூன்றாங் குலோத்துங்கன் வரையில் பல சோழர்களுடையவும், சடாவர்மன் சுந்தரபாண்டியனுடையதும், ஹொய்சளருடையவுமான கல் வெட்டுகள் இருக்கின்றன.

87 திருமழிசை

செங்கற்பட்டு மாவட்டத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வட்டத்தில் இருக்கிறது. சோழர்காலக் கட்டடமான சிவன் கோயிலொன்றும், திருமழிசையாழ்வார் கோயிலும், திருமால் கோயிலும் இருக் கின்றன. திருமழிசையாழ்வார் பிறந்த ஊர்.

88 திருமறைக்காடு

தஞ்சாவூர் மாவட்டத்தில் திருத்துறைப் பூண்டி வட்டத்தில் உள்ள ஓர் ஊர். வேதாரணியம் என வழங்கப்படுவது.

இவ்வூர்க் கோயிலில் பராந்தகசோழன் (907-955) காலம் முதல் சோழ வரலாற்றை விளக்கும் எண்பத்து நான்கு கல்வெட்டுகள் உள்ளன.

இவ்வூர் பரஞ்சோதி முனிவரும் தாயுமானவரும் பிறந்த இடம். தமிழகத்தின் மிகப்பெரிய உப்பளமாகிய 'வேதாரணிய உப்பளம்' இங்கு உள்ளது. உப்பு வரியை எதிர்த்து நடந்த சத்தி யாக்கிரகத்தால் இவ்வூரின் புகழ் இந்தியா முழுமையும் பரவிற்று.

## 89 திருமாணிகுழி

நடுநாட்டிலுள்ள ஊர். தென்னார்க்காடு மாவட்டத்தில் திருப்பாதிரிப் புலியூர் ரெயில் நிலையத்திற்கு மேற்கே மூன்றரை மைல் தொலைவிலுள்ளது. திருமால் வாமனராக அவதரித்த போது வழிபட்ட தலமென்பது புராண வரலாறு. மாணி என்பது பிரமசாரியைக் குறிக்கும்.

இக்கோயிலிலுள்ள கல்வெட்டுகளிலிருந்து இரண்டாம் குலோத்துங்கன் இத்தலத்தில் முடிசூட்டிக் கொண்டான் என்று தெரிகிறது. இவ்வூர் 'விருதராச பயங்கர வளநாட்டு மேற்கா நாட்டு உதவித் திருமாணி குழி' எனச் சோழர் காலக் கல் வெட்டிலும், வீரபாண்டியன் காலத்தில் 'நடுவில் மண்டலத்துத் திருமாணி குழி' என்றும் காணப்படுகிறது.

## 90 திருமாற்பேறு

தொண்டை நாட்டிலுள்ள ஊர். செங்கற்பட்டு மாவட்டத்தில் காஞ்சிபுரத்திற்கு வடமேற்கே ஏழு மைல் தொலைவில் உள்ளது. சலந்தரனைக் கொன்ற சக்கரத்தைத் திருமால் சிவபெருமானை வழிபட்டுப் பெற்ற தலம் என்பது தல வரலாறு.

இக்கோயில் கல்வெட்டொன்றில் 'இவ்வூர் ஜயங் கொண்ட சோழ மண்டலத்திலுள்ள காமக்கோட்டத்தின் பகுதியான வல்ல நாட்டிலுள்ள திருமாற்பேறு என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. இத்தலத்தில் அக்கினீசுரர் கோயில் ஒன்று தனியே இருந்திருக்க வேண்டும் என்று கல்வெட்டிலிருந்து தெரிகிறது. இக்கோயிலைக் கட்டவும், சுற்றுமண்டபத்தை முற்றுப்பெறச் செய்யவும் விராட அரசன் அனையமான் என்ற மண்டலாதித்தனால் தானங் கொடுக்கப்பட்டதென்றும், உத்தம சோமீசுரமுடையார் உருவம் செப்யச் சோழன் இராஜகேசரிவர்மனால் நிலம் தானங் கொடுக்கப்பட்டதென்றும் வேறு சில செய்திகளும் கல்வெட்டு களால் அறியப்பெறுகின்றன.

## 91 திருயேச்சூர்

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் பேரளம் புகைவண்டி சந்திப்பிலிருந்து சுமார் ஒரு மைல் தொலை வில் உள்ளது.

இங்குள்ள கோயிலின் விமானம் யானைமேல் இருப்பது போல் இருக்கிறது. இறைவனையும் இறைவியையும் யானைமீது வைத்துக் கதிரவன் வழிபட்டான் என்பது ஐதிகம்.

## 92 திருமுதுகுன்றம்

இப்பொழுது விருத்தாசலம் என வழங்கப்படுகிறது. தென்னார்க்காடு மாவட்டத்தில், விருத்தாசலம் வட்டத்தின் தலைநகர்.

இவ்வூர் வரலாற்றுச் சிறப்புடையது. இவ்விடத்தில்தான் கிளைவ் பிரபுவும், பிகர் (Pigot) என்பவரும் பிரெஞ்சுக்காரரிடம் கைதியாகும் நிலையிலிருந்து தப்பினர் என்று கூறுகின்றனர்.

## 93 திருமுருகன்பூண்டி

கொங்கு நாட்டிலுள்ள ஊர். கோயம்புத்தூர் மாவட்டத்தில் திருப்பூர் புகைவண்டி நிலையத்திலிருந்து வடக்கே ஐந்துமைல் தொலைவிலுள்ளது. இதற்கு மாதவி வனம் என்றும் பெயர் உண்டு. துருவாசமுனிவர் இம்மரத்தை வானுலகிலிருந்து கொண்டு வந்தாராம். முருகன் வழிபட்டதனால் முருகன் பூண்டி எனப் பெயர் வந்ததென்பர்.

இங்குள்ள கோயிலுக்கு வெளியேயுள்ள பிள்ளையார் கோயிலுக்கெதிரில் ஒரு பாறையில் இருக்கும் சிறு குழியொன்றில் பன்னிரண்டாண்டுகட்கு ஒருமுறை நீர் பொங்குவதாகக் கூறுகின்றனர்.

## 94 திருமுல்லைவாயில்

இப்பெயருடன் இரண்டு ஊர்கள் உள்ளன.

(1) வடதிருமுல்லைவாயில்: இது தொண்டை நாட்டிலுள்ளது செற்கற்பட்டு மாவட்டத்தில் அம்பத்தூர் ரெயில் நிலையத்திலிருந்து வடமேற்கே ஒன்றரைமைல் தொலைவில் உள்ளது. தொண்டைமான் சக்கரவர்த்தி வழிபட்டஊர். கோயிலில் இரண்டு பெரிய எருக்கந்தூண்கள் இருக்கின்றன. இவைகளுக்கு மூன்றிடங்களில் பூணிட்டிருக்கின்றனர். அடியார்கள் சந்தனத் தைலம் பூசுகின்றனர்.

(2) தென் திருமுல்லைவாயில்: இது சோழ நாட்டிலுள்ளது. இது தஞ்சாவூர் மாவட்டத்தில் சீர்காழிக்குக் கிழக்கே ஒன்பது மைல் தொலைவில் உள்ளது. கடலோரத்தில் இருக்கிறது.

## 95 திருமுனைப்பாடி நாடு

இது நடுநாடு என்றும், மலையமானாடு என்றும் கூறப்படும். தலைநகர் திருக்கோவலூர். இங்கே மலையமான் திருமுடிக்காரி அரசாண்டான்.

தென்னார்க்காடு மாவட்டத்தின் ஒரு பகுதியாக இப்பொழுதுள்ளது.

96 திருமெய்யம்

பாண்டி நாட்டிலுள்ள ஊர். இராமநாதபுரம் மாவட்டத்தில் சிவகங்கை வட்டத்தில் மானாமதுரை ரெயில்நிலையத்திற்கு வடகிழக்கே முப்பத்தைந்து மைல் தொலைவிலுள்ளது.

97 திருவக்கரை

தொண்டை நாட்டிலுள்ள ஊர். தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரம் வட்டத்தில் உள்ளது. புதுச்சேரி புகைவண்டி நிலையத்திலிருந்து பதின்மூன்று மைல் தொலைவில் உள்ளது.

வக்கரம் என்னும் அசுரன் வழிபட்டதனால் வக்கரை என்ற பெயர் வந்ததென்பர்.

98 திருவண்ணாமலை

வடஆர்க்காடு மாவட்டத்திலுள்ளது. திருவண்ணாமலை வட்டத்தின் தலைநகர்.

அழகிய வடிவுடையதும் 2665 அடி உயரமுடையதுமான ஒரு மலையும் நாற்புறங்களிலும் நான்கு கிளைகளும் அமர்ந்த குன்றுத் தொகுதியின் கீழ்ப்பகுதியில், அதன் தாழ்வரையில் அமைந்துள்ளது இப்பெரிய ஊர். அண்ணாமலையார் கோயில் நகரின் நடுவில் உள்ளது. இங்கே நடைபெறும் கார்த்திகைத்தீபம் தமிழ் நாடு அறிந்த பெரிய திருவிழா.

கோயில் சுவர்களிலுள்ள கல்வெட்டுகள் அதனுடைய வரலாற்றைக் கூறுகின்றன. இக்கல்வெட்டுகளில் இவ்வூர் முதல் இராஜேந்திரன் காலத்தில் (1038) மதுராந்தக வளநாட்டுப் பெண்ணை வடகரைத் திருவண்ணாமலை என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. பிறகு இராஜராஜ வளநாடு என்றும், ஜெயங்கொண்ட சோழமண்டலம் என்றும் வளநாட்டுப் பெயர் மாறியுள்ளது. ஜெயங் கொண்ட சோழ மண்டலம் என்று மாறியபோது உட்பிரிவு செங்குன்றக் கோட்டத்து அண்ணா நாட்டுத்தனியூர் என்று இவ்வூர் குறிப்பிடப் பெற்றுள்ளது. விஜயாலய சோழவமிசம் (பத்து-பன்னிரண்டாம் நூற்றாண்டு) கோப்பெருஞ் சிங்கன் முதலான பல்லவ அரசர்கள் (பதின்மூன்றும் நூற்றாண்டு) நடுநாட்டுச் சிற்றரசர்கள் (பதினான்காம் நூற்றாண்டு) விசயநகரத்து மன்னர்கள்

(பதினைந்து—பதினாறாம் நூற்றாண்டு) வேலூர் நாயக்கர்கள் (பதினோழம் நூற்றாண்டு(ஆர்ச்காட்டு நவாப்புகள் (பதினெட்டாம் நூற்றாண்டு) முதலியோர் காலங்களில் இக்கோயில் சிறந்து விளங்கிற்று.

## 99. திருவயிந்திரபுரம்

தென்னார்க்காடு மாவட்டத்தில் திருப்பாதிரிப்புலியூருக்கு மேற்கே நான்கு மைல் தொலைவில் உள்ளது. அகீந்திரன் எனப் படும் திருவனந்தாழ்வான் பூசித்த இடம் ஆதலால் அகீந்திரபுரம் எனப் யெயர் பெற்றது என்பர். இது அயிந்திரபுரம் என்றாகியது.

## 100 திருவரங்கம்

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் காவிரிக்கும் கொள்ளிடத் திற்கும் இடையிலுள்ள தீவில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு ஸ்ரீரங்கம் என்று பெயர் வழங்குகிறது. அரங்கம், கோயில், போக மண்டபம், பூலோக வைகுண்டம் என்னும் பெயர்களும் இவ்வூருக்கு உண்டு. வைணவர்களின் முக்கியமான தலம் இது.

ஐந்தாம் வீதியான அகளங்க நாட்டாழ்வான் வீதியிலுள்ள திருவரங்கத் தமுதனார் சன்னிதியில் இருக்கும் சிம்மத்தூண்கள் கி பி. 650 காலத்தவை என்று கருதப்படுகின்றன. இதுவரை வெளி வந்துள்ள சுமார் 353 கல்வெட்டுகளிலிருந்து இக்கோயிலின் வரலாறும், அக்காலத்திய அரசியல் வரலாறும் தெரியவருகின்றன. இக்கோயிலுக்குச் சோழ, பாண்டிய, பல்லவ, ஹொய்சள மன்னர் களாலும், அவர்கள் தளபதிகளாலும் அவ்வவர் காலங்களில் செய்யப்பட்ட திருப்பணிகளும், அணிவிக்கப்பெற்ற அணிகலன் களும் பலப்பல என்று தெரிகின்றன. தென்னிந்திய வரலாற்றுக் கல்வெட்டுகளென வெளியிடப்பட்டவற்றுள் பக்கங்கள் 89 முதல் 211 வரை உள்ளவை இக்கோயிலைப் பற்றியவை.

கி. பி. 1327-இல் முகமது துக்ளக் தென்னாட்டின் மீது அனுப்பிய படை ஹொய்சள, மூன்றாம் பல்லாளரை முறியடித்துப் பின் ஸ்ரீரங்கநாத விக்கிரகத்தை எடுத்துக்கொண்டு போய், மைசூர் மேலைக் கோட்டையில் சிலகாலமும், பின்னர் திருப்பதிமலையில் கி. பி. 1371 வரையிலும் வைத்திருந்ததாகவும், பின்னர் இரண் டாம் கம்பண்ணா என்ற மன்னன் தளபதியான கோபன்னாவால் மறுபடியும் ஸ்ரீரங்கத்திற்குக் கொணரப் பட்டதாகவும் தெரிகிறது. காஞ்சிபுரம் தாயார் சன்னிதியிலுள்ள கல்வெட்டும் இதை விளக்குகிறது.

சக 1448-இல் கிருஷ்ணதேவராய மன்னன் இக்கோயிலின் முதல் மண்டபத்திலுள்ள கதவுகள் இரண்டினுக்கும் பொன் தகடு வேய்ந்ததாகவும், தங்கபீடம் கொடுத்தாகவும் தெரிகிறது.

ஸ்ரீரங்கநாதரது கோயில் ஒன்றே ஏழு பிராகாரங்களைக் கொண்ட முழு ஆலயம் எனக் கருதப்படுகிறது. இந்த ஏழு பிரகாரங்களின் மொத்தப் பரப்புச் சுமார் 160 ஏக்கர்கள், மதில் களின் மொத்த நீளம் ஆறுமைல்கள். ஒவ்வொரு வீதியிலும் நான்கு பக்கங்களிலும் மிக அழகிய கோபுர வாயில்கள் இருக்கின்றன.

## 101 திருவல்லம்

திருவலம் என்று வழங்கப்படும் இவ்வூர் தொண்டை நாட்டி லுள்ளது. வடஆர்க்காடு மாவட்டத்தில் வாலாஜா வட்டத்தில் உள்ளது. எட்டு மைல் தொலைவில் புகழ் பெற்ற முருகன் தல மாகிய வள்ளிமலை இருக்கிறது.

## 102 திருவல்லிக்கேணி

தொண்டை நாட்டிலுள்ள ஊர். சென்னை மாநகரின் ஒரு பகுதியாக விளங்குவது. இங்கே பார்த்தசாரதி கோயில் இருக் கிறது. கோயிலில் அழகிய சிற்பங்களும் சிலைகளும் இருக்கின்றன. கோயிலின் முன்னால் அழகிய படித்துறைகளுடன் கூடிய குளம் ஒன்று இருக்கிறது.

இக்கோயில் பல்லவர் காலத்தில் கட்டப்பெற்று, பின்னர் சோழ பாண்டிய மன்னர்களால் விரிவாக்கப்பட்டது. 1564-இல் பக்தி மான் ஒருவரால் புதுப்பிக்கப் பெற்றது.

பண்டைக்கால வழக்குப்படி கண்ணபிரான் குடும்ப சமே தராய்க்குடி கொண்டுள்ள தலங்கள் இரண்டனுள் முக்கியமானது மற்றொரு தலம் திருத்தங்கல்.

## 103 திருவலஞ்சுழி

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு மேற்கே நான்கு மைல் தொலைவில் உள்ளது.

பிலத்திற் சென்று விட்ட காவிரி வெளிப்படுவதற்காக ஏரண்ட முனிவர் தம்மைப் பலி கொடுத்த பிறகு, காவிரி மேலே வலமாகச் சுழித்துக் கொண்டு வந்ததனால் இவ்வூர் வலஞ்சுழி என்ற பெயர் பெற்றதென்பர்.

## 104 திருவலிதாயம்

தொண்டை நாட்டிலுள்ள ஊர். செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ளது. வில்லிவாக்கம் புகைவண்டி நிலையத்திலிருந்து தென் மேற்கே இரண்டு மைல் தொலைவிலுள்ளது.

இவ்வூர்க் கோயிலிலுள்ள கிணற்றுநீர் மிகவும் சுவையுடையது என்று கூறுகின்றனர்.

## 105 திருவழுந்தூர்

இவ்வூர் தஞ்சை மாவட்டத்தில் தேரழுந்தூர் என்னும் புகை வண்டி நிலையத்தின் தென்கிழக்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது.

அகத்திய முனிவர் தமக்கு நேர்ந்த ஒரு சாபத்தை நீக்கும் பொருட்டு இத்தலத்திற்கு வந்து சிவபெருமானைக் கருதித் தவம் புரிந்திருக்க, வான் வழியே ஊர்ந்து சென்ற ஒரு அரசனது தேர், அம்முனிவருக்கு நேரே பறந்த காரணத்தால், நிலத்தில் விழுந்து அழுந்தியமை பற்றித் தேரழுந்தூர் என்றாயிற்று என்று புராணம் கூறும். இதை அழுந்தூர் எனவும் கூறுவர்.

திருவழுந்தூர் என்பது தேரழுந்தூர் எனச் சிதைவுற்றிருக்க வேண்டும் என்று அறிஞர்கள் கூறுவர்.

கம்பர் இவ்வூரினரென்பர். இவ்வூரில் கம்பர்மேடு என வழங்கும் ஓர் இடமும் உண்டு. இது கம்பர் தங்கி வாழ்ந்திருந்த இடம் என்கின்றனர். உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி என்னும் சோழன் இவ் அழுந்தூர் வேளின் மகளை மணம் புரிந்து கொண்டவனென்பது, தொல்காப்பியம் அகத்திணையியல் 30-ஆம் நூற்பாவில், நச்சினார்க்கினியர் உரையால் அறியலாகிறது.

சோழன் கரிகாற் பெருவளத்தான் இவ் இளஞ்சேட் சென்னியின் புதல்வனாவான். ''உருவப்பஃறேர் இளையோன் சிறுவன்'' எனப் பொருநர் ஆற்றுப்படை (130) கூறும். இவன் தஞ்சை நீடாமங்கலத்திற்கு அருகில் உள்ள வெண்ணி யென்னும் ஊர்ப்புறத்து நேர்ந்த பெரும் போர் ஒன்றில், ஏனை இரு பெரு வேந்தரோடு, பதினொரு குறுநில மன்னரையும் புறங்கண்டு வென்றான். அவ்வெற்றியைப் பாராட்டித் திருவழுந்தூரினர் (அவன் மாமன் முதலோர்) ஒரு பெருங் கொண்டாட்டம் கொண்டாடினர் என்றும் அதன் பெரிய ஆரவாரம் வெகுதூரம் பரவிய தென்றும் அகநானூறு 246-ஆம் செய்யுள் கூறுகிறது.

இவ்வூர்ச் சிவன் கோயில் கல்வெட்டுகள் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தவை என்றும், 'செயங் கொண்ட சோழ வளநாட்டுத் திருவழுந்தூர்த் திருமடம் உடைய நாயனார்' எனநாட்டின் பெயரும், கோயிலின் பெயரும் பிறவும் அறியலாகும்.

## 106 திருவள்ளூர்

திருவெவ்வுளூர் என்று வழங்கப்பட்ட இவ்வூர் தொண்டை நாட்டிலுள்ளது. செங்கற்பட்டு மாவட்டத்தில் திருவள்ளூர் புகை வண்டி நிலையத்திற்கு வடக்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது.

திருமால் சாலி கோத்திர முனிவருக்குக் காட்சி தந்து 'உறை தற்குரியது எவ்வுள்?' என வினவியதால் திரு எவ்வுளூர் எனப்பெயர் வந்ததாம்.

## 107 திருவனந்தபுரம்

கேரள நாட்டின் தலைநகர். முன்னர் திருவிதாங்கூர் சமஸ் தானத்தின் தலைநகராக இருந்தது. பழைய கோட்டையைச் சுற்றி எழுந்த நகரம். இங்கே 1935இல் நிறுவப்பட்ட சித்திராலயத்தில் இராஜபுதன, மொகலாய, தஞ்சாவூர் மரபு ஓவியங்களும், அஜந்தா சிக்ரியா, சுதை ஓவியங்களின் பிரதிகளும், திருவிதாங்கூர், கொச்சி சுவரோவியங்கள் ஐந்தும், நவீன ஓவியர் தீட்டிய ஓவியங்களும். திபெத்திய, சீன. ஜப்பானிய ஓவியங்களும் இருக்கின்றன.

இங்குள்ள திருக்கோயிலின் கட்டட அமைப்பு திராவிடக் கட்டடச் சிற்ப முறைக்கு வேறுபட்டது என்று கூறுகின்றனர். கி. மு. 310 0இல் கட்டப் பெற்றதாகச் சொல்லப்படுகிறது. இதன் ஏழடுக்குக் கட்டடம் வானளாவியது. அழகிய சிற்பங்கள் கொண்டது. எடுத்துக்காட்டாக உட்புற வழியில் சிற்பங்கள் செதுக்கப் பெற்ற 368 கருங்கல் தூண்கள் இருக்கின்றன.

## 108 திருவாமாத்தூர்

தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரத்திற்கு வடமேற்கே நான்கு மைல் தொலைவில் உள்ளது. பசுக்களுக்குத் தாய் போன்ற ஊர் எனப் பொருள்படும். இரட்டைப் புலவர்கள் திருவா மாத்தூர்க் கலம்பகம் பாடியுள்ளனர்.

முதற் பராந்தகன் முதலாக முதற் குலோத்துங்கன் வரை பல சோழர்களுடைய கல்வெட்டுகள் இவ்வூர்க் கோயிலில் உள்ளன

முதற் பராந்தகன் காலத்தில் கற்றளியாகக் கட்டப்பட்டது. இந்த அரசன் காலத்தில் இவ்வூர் 'அருவா நாட்டு மீய்வழி வாவலூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர்' என வழங்கப் பெற்றது. இத்திருக்கோயிலில் மூன்று சந்திகளிலும் திருப்பதிகம் பாடி வரப் பதினாறு குருடர்களும், அவர்களுக்கு வழிகாட்ட இருவரும் நியமிக்கப்பட்டிருந்தனரெனக் கல்வெட்டுக் கூறும்.

## 109 திருவாரூர்

சோழ நாட்டில் உள்ளது. தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்தது. இது பிறக்க முக்தி தரும் தலம் என்பது மரபு.

இவ்வூர்க் கோயிலில் பராந்தகன், இராசராசன், முதல் இராசேந்திரன், இராசாதிராசன், முதற்குலோத்துங்கன், இரண்டாம் இராசேந்திரன், விக்கிரமசோழன், இரண்டாம் குலோத்துங்கன் முதலியோருடைய கல்வெட்டுகள் உள்ளன. அவற்றில் இந்நகரம் 'க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுத் திருவாரூர் கூற்றத்துத் திருவாரூர்' எனவும், 'அதிராசேந்திர வளநாட்டுத் திருவாரூர் கூற்றத்துத் திருவாரூர்' எனவும், 'செய மாணிக்க வள நாட்டுத் திருவாரூர் கூற்றத்துத் திருவாரூர்' எனவும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

## 110 திருவாலங்காடு

செங்கற்பட்டு மாவட்டத்தில் திருவாலங்காடு புகைவண்டி நிலையத்திற்கு வடகிழக்கே மூன்று மைல் தொலைவிலுள்ளது.

காரைக்காலம்மையார் கைலையிலிருந்து தலையாலே நடந்து வந்து, இங்கு இறைவனுடைய திருநடனத்தைச் சேவித்துத் திருவடியின் கீழ் சிவானந்தத்தை நுகர்ந்திருப்பதாகப் பெரியபுராணம் கூறும்.

ஒரு வணிகனுக்குத் தாம் கொடுத்த வாக்கைக் காப்பாற்றத் தம் உயிரைக் கொடுத்த வேளாண் குடியினர் வாழும் பழையனூர் இதன் அருகில் ஒரு மைலில் உள்ளது.

கல்வெட்டுகளில் இவ்வூர் 'மணவிற் கோட்டத்து மேல் மாலை பழையனூர் நாட்டுத் திருவாலங்காடு' என்றும், 'ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து மேல் மாலையாகிய பழையனூர் நாட்டுத் திருவால்ங்காடு' என்றும் வழங்கப் பெறுகிறது. இக்கல்வெட்டுகள் முதற் பராந்தகசோழன் காலம் முதலாக விஜய நகர அரசர் காலம் வரையுள்ளவை.

## 111 திருவான்மியூர்

தொண்டை நாட்டிலுள்ள ஊர். சென்னை மயிலாப்பூருக்குத் தெற்கே மூன்று மைல் தொலைவில் கடற்கரையோரத்தில் உள்ளது. வான்மீகன் வழிபட்ட தலம் என்று புராணம் கூறும். ஊரின் வட மேற்கில் வான்மீகர் கோயில் ஒன்று உள்ளது.

## 112 திருவானைக்கா

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருச்சிராப்பள்ளிக்கு வடக்கே மூன்று மைல் தொலைவில் உள்ளது.

இவ்வூர்க் கோயிலின் சிறிய இலிங்கம் எப்பொழுதும் நீர் சூழ்ந் திருக்கும். காரணம் காவிரி, கொள்ளிடம் ஆகிய பேராறுகள் முறையே தெற்கிலும் வடக்கிலும் ஓட இடையில் உள்ள கோயிலின் கருப்ப இல்லம் தரைமட்டத்திற்கும் தாழ்ந்திருப்பதேயாகும்.

திருவெண்ணாயில் என்ற மற்றொரு பழம் பெயரும் இதற்கு உண்டு. கணநாதர் இருவர் சாபத்தால் யானையும் சிலந்தியுமாக இவ்வூரில் பிறந்து வழிபட்டனர் என்றும், பின்னர் இறந்து மீண்டும் கணநாதர் ஆயினர் என்றும் கூறுவர்.

சிலந்தியாக வந்த மாலியவான் சோழ மன்னனாகப் பிறந்து மீண்டும் சிவத்தொண்டு புரிந்தான் என்று நூல்கள் கூறும். இவனே 'எண்டோளீசற்கு எழில்மாடம் எழுபது செய்து உலக மாண்ட கோச்செங்கணான்' என்ற கோச்செங்கட் சோழ நாயனார்.

சிலந்தி சோழனாகப் பிறந்தது பதினோராம் நூற்றாண்டிற் குரிய முதலாம் இராசேந்திரன் திருவாலங்காடு செப்புப்பட்டயங் களிலும் குறிப்பிடப்படுகிறது. இக்கோயிலிலேயுள்ள இரண்டு பிற் காலக் கல்வெட்டுகளும் இக்கதையைக் கூறும்.

சிவபிரான் திருநீற்றைக் கூலியாகக் கொடுத்து இக்கோயிலில் கட்டுவித்த மதில் 'திருநீறிட்டான்மதில்' என்ற ஒரு மதில் உண்டு. இதுபற்றியே சோழர் மரபில் திருநீற்றுச் சோழன் என்ற பட்டம் பெற்றவர் பலர் இருந்தனர். முதலாம் குலோத்துங்கனும் (Ins. 312-1901) இரண்டாம் குலோத்துங்கனும் (Ins. 195-1901) கடைசி யாக இப்பெயர் கொண்டவர்கள்.

ஆயினும் 14-ஆம் நூற்றாண்டுக்குரிய பாண்டிய மன்னனான சுந்தரபாண்டியனின் கல்வெட்டு ஒன்று அங்குசமும் கயலிரண்டு மான பாண்டியரின் இலச்சினையுடன் இக்கோயிலின் வெளிப்பிர

காரத்தில் வடசுவரில் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இதைத் 'திருநீற்றுச்சுந்தரபாண்டியன் திருமாளிகை' எனக் கூறுதலால், இதை எடுப்பித்த பாண்டியனும் திருநீற்றுச் சுந்தரபாண்டியன் என்ற விருதைப் பெற்றவன் எனத் தெரிகிறது.

இக்கோயிலில் கிடைக்கும் பல கல்வெட்டுகள், கோயிலைக் கட்டிய, கோயிலுக்குக் கொடையளித்த பல மன்னர்களைப்பற்றிய செய்திகளைத் தருகின்றன.

## 113 திருவிடவெந்தை

தொண்டை நாட்டிலுள்ள ஊர். செங்கற்பட்டு மாவட்டத்தில் வண்டலூர் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே பதினாறு மைல் தொலைவிலுள்ளது.

## 114 திருவிடைமருதூர்

தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணம் வட்டத்தில் உள்ள ஊர். இது வரகுணபாண்டியனுடைய பாவத்தைப் போக்கிய தலம். இவ்வூருக்கு மருதவனம் என்றும், மத்தியார்ச்சுனம் என்றும் பெயர் உண்டு.

இக்கோயிலில் நாடக அரங்கு ஒன்றிருந்ததென்றும், தைப்பூசத் திருவிழாவின் பிற்றைநாள் தொடங்கி மூன்று நாள் வரை ஆரியக்கூத்தாடுவது வழக்கமென்றும் கல்வெட்டுக் கூறுகிறது. முதற்பராந்தகன் முதலாகப் பல சோழ மன்னர்களின் காலத்துக் கல்வெட்டுகளில் இவ்வூர் ''தென்கரை திரைமூர் நாட்டுத் திருவிடை மருதில்'' எனவும், 'உலகுய்யக் கொண்ட சோழ வளநாட்டுத் திரைமூர் நாட்டுத் திருவிடை மருதூர்'' எனவும் காணப் பெறுகின்றன.

## 115 திருவிந்தளூர்

தஞ்சாவூர் மாவட்டத்தில் மாயூரத்திற்கு வடகிழக்கே நான்கு மைல் தொலைவில் உள்ள ஊர்.

சந்திரன் தனது சாபம் நீங்கப் பெற்ற இடமாதலால் இதற்கு இப்பெயர் வந்தது என்று கூறுவர். இதற்குச் சுகந்தவனம் என்றும் பெயருண்டு.

## 116 திருவீழிமிழலை

சோழநாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் குற்றாலம் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே ஆறு மைல் தொலைவில் உள்ளது. வீழிச் செடிகள் நிறைந்த ஊராதலின் இப்பெயர் பெற்றதென்பர்,

இவ்வூர்க் கோயிலிலுள்ள நூற்றுக்கால் மண்டபத்தூண்கள் சிறந்த வேலைப்பாடுடையன. இக்கோயிலில் முதற்பராந்தகன் காலத்திலிருந்து பதினொரு சோழ மன்னர்களின் காலத்திலும், சடாவர்மன் சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் காலத்திலும், விசய நகர பரம்பரை விருப்பண்ண உடையார் காலத்திலும் வெட்டப்பெற்ற கல்வெட்டுகள் இருக்கின்றன. முதற் குலோத் துங்கன் காலத்திலே 'உலகுய்யக் கொண்ட சோழ வளநாட்டு வேணாட்டுப் பிரமதேயம் திருவீழிமிழலை' என இவ்வூர் குறிக்கப் படுகிறது. இராசேந்திர சோழன் திருவீழிமிழலை திரு நாவுக்கரசர் மடத்திற்கு நிலம் விட்டதும், மூன்றாம் இராசராசன் மூன்றாம் பிராகாரத்தில் திருவாதவூராளி மாணிக்கவாசகர் சிலையை அமைத்ததும், முதற்குலோத்துங்கன் தன் ஆட்சி முப்பத்து நான்காம் ஆண்டில் சண்டேசுவரரை அமைத்து வழி பாட்டுக்கு வகை செய்ததும், பிறவும் இக்கல்வெட்டுகளால் அறியப்பெறுகின்றன.

## 117 திருஊறல்

இது தொண்டை நாட்டில் தக்கோலம் புகைவண்டி நிலை யத்திற்குக் கிழக்கே மூன்று மைல் தொலைவில் உள்ளது. இங்கு நந்தியின் வாயிலிருந்து எப்போதும் நீர் விழுந்து கொண்டே யிருக்கும். அதனால் திருஊறல் என்னும் பெயர் வந்ததாம்.

இவ்வூர்க் கோயிலில் திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துங்கன், இராசகேசரிவர்மன், கோபார்த்திவேந்திரவர்மன் ஆகியோர் காலத்திய கல்வெட்டுகள் உள்ளன.

## 118 திருவெண்காடு

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் சீகாழிக்குத் தென்கிழக்கே ஏழு மைல் தொலைவில் உள்ளது.

இக்கோயில் கல்வெட்டுகள் முதலாம் இராசராசன் முதலான பல சோழ மன்னர்களின் காலத்திலும், மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் முதலான சில பாண்டிய மன்னர்களின் காலத் திலும், விசய நகர வேந்தர்களில் வீர விருப்பண்ண உடை யார், கிருஷ்ணதேவராயர் காலத்திலும் வெட்டப் பெற்றவை. இக்கல்வெட்டுகளில் நடராசருக்கு ஆடவல்லான் என்றும், கீழைக் கோபுரவாயிலுக்கு விக்கிரம பாண்டியன் வாயில் என்றும் பெயர்கள் உள்ளன. கண்டராதித்த சோழர் மனைவியார்

செம்பியன் மாதேவியார் செய்த அருந்தொண்டுகளும், சோழரும் பிறரும் கோயிலுக்கு விட்ட மானிய விவரமும் குறிப்பிடப்பட்டுள்ளன.

## 119 திருவெண்ணெய் நல்லூர்

நடுநாட்டிலுள்ள ஊர். திருவெண்ணெய் நல்லூர்ரோடு என்ற புகைவண்டி நிலையத்திலிருந்து மூன்று மைல் தொலைவில் உள்ளது. சுந்தரமூர்த்தி நாயனாரை இறைவன் தடுத்தாட் கொண்ட இடம்.

இங்குள்ள சாசனங்களில் "இராசராச வளநாட்டுத் திருமுனைப்பாடி திருவெண்ணெய் நல்லூர் நாட்டுப் பிரமதேயம் திருவெண்ணெய் நல்லூர் உடையார் ஆட்கொண்ட தேவர்" என்று பெருமான் பெயர் குறிக்கப்பெறுகிறது.

வெண்ணெய்க் கோட்டை கட்டிப் பஞ்சாக்கினி மத்தியில் இருந்து அம்பிகை தவம் செய்தமையால் வெண்ணெய் நல்லூர் என்று பெயர் வந்ததாக ஒரு வரலாறு வழங்குகிறது.

## 120 திருவெள்ளறை

சோழநாட்டிலுள்ள ஊர் திருச்சிராப்பள்ளி கோட்டை புகை வண்டி நிலையத்திலிருந்து வடக்கே பதினான்கு மைல் தொலைவில் உள்ளது.

## 121 திருவெள்ளியங்குடி

சோழநாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவிடமருதூர் புகைவண்டி நிலையத்திலிருந்து வடக்கே ஐந்து மைல் தொலைவில் உள்ளது.

## 122 திருவேதிகுடி

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூரிலிருந்து திருவையாற்றுக்குப் போகும் வழியில் ஏழு மைல் தொலைவில் உள்ளது. வேதங்கள் வழிபட்ட தலம் என்றும், இறைவர் வாழை மடுவில் தோன்றினார் என்றும் கூறுகின்றனர்.

## 123 திருவேள்விக்குடி

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் குற்றாலத்திற்கு வடக்கே மூன்று மைல் தொலைவில் உள்ளது. ஒரு

அரசன் மகன் தான் விரும்பிய பெண்ணை மணக்கத் தவஞ்செய்து, சிவபெருமானருளால் மணந்த இடம். அதனால் வேள்விக்குடி எனப் பெயர் வந்ததாம்.

## 124 திருவைகாவூர்

சோழ நாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு வடக்கே சுமார் பத்து மைல் தொலைவில் கொள்ளிடத்தின் தென்கரையிலுள்ளது.

புலிக்கஞ்சிய வேடன் வில்வமரத்தின் மீதேறிக் கொண்டு வில்வ இலைகளைப் பறித்துக் கீழேயெறிய, அவை சிவலிங்கத்தின் மீது விழுந்து கொண்டே இருந்ததனால் அருச்சனை செய்த பலன் கிடைக்கக் காலையில் சிவபெருமான் காட்சி கொடுத்த செய்தி கோயிலில் காட்டப்பெற்றிருக்கிறது.

## 125 திருவையாறு

சோழநாட்டிலுள்ள ஊர். தஞ்சாவூருக்கு வடக்கே ஏழு மைல் தொலைவில் உள்ளது. தஞ்சாவூர் முதல் திருவையாறு வரையில் உள்ள வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி என்னும் ஐந்து ஆறுகளையுடையதாகையால் ஐயாறெனப் பெயர் பெற்றதென்பர். சூரியபுட்கரிணி, சந்திர புட்கரிணி, கங்கை, பாலாறு, நந்திவாய்நுரை (நந்தி தீர்த்தம்) என்னும் ஐந்து தெய்வீக நதிகள் தம்முட் கலப்பதால் ஐயாறென்றாயிற்றென்பர் சிலர். திருக்கயிலையில் சிவபெருமான் உமையுடன் வீற்றிருக்குந் திருக்கோலத்தை அப்பர் இத்தலத்திற் கண்டு வணங்கினாரென அப்பர் வரலாறு கூறுகிறது.

இவ்வூர்க் கோயில் பல்லவமன்னர் ஒருவராற் கட்டப்பெற்றது. மூன்றாம் திருச்சுற்றாலையின் கிழக்குக் கோபுரம் விக்கிரம சோழனால் கட்டப்பெற்றது. கோயிலின் மேலைக் கோபுரமும், மூன்றாம் திருச்சுற்றாலையின் தெற்குக் கோபுரமும், சூரிய புட்கரிணியும் தஞ்சாவூரையாண்ட அச்சுதப்ப நாயக்கர் காலத்தில் மருதூர் ஆனையப்பபிள்ளையென்பவராலும் அவர் தம்பி வைத்தியநாதராலும் எடுக்கப் பெற்றவையாகும். மூன்றாம் திருச்சுற்றாலையின் வடபால் ஒலோக மாதேவீச்சுரம் என்னும் பெயருள்ள ஒரு கற்கோயில் இருக்கிறது. அது முதலாம் இராசராச சோழனுடைய மனைவியரான ஒலோக மாதேவியால் கட்டப் பெற்றது.

இக்கோயிலினுள்ளே ஐயாறப்பர் கோயில், தென்கயிலைக் கோயில், ஒலோகமாதேவீச்சுரம் ஆகிய மூன்று கோயில்களிலும்

கல்வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டுகள் முதலாம் ஆதித்தன் முதலாக, மூன்றாங் குலோத்துங்கன் ஈறாகப் பல சோழமன்னர்கள் காலத்திலும், பாண்டியர்களில் கோச்சடைய வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தரபாண்டியன் காலத்திலும், வீர முக்கண் உடையார், வீரசரவண உடையார் காலத்திலும்' தஞ்சாவூரையாண்ட அச்சுதப்ப நாயகர் காலத்திலும் வெட்டப் பெற்றவை. இக்கல்வெட்டுகளில் இறைவர் திருவையாறுடைய மகாதேவர் என்றும், இறைவி உலகுடைய நாச்சியார் என்றும் குறிப்பிடப்பெற்றுள்ளனர். இக்கோயில் தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமானது. இவ்வூரில் இசைமேதை தியாகராஜ சுவாமிகள் சமாதி உளது.

## 126 திருவொற்றியூர்

தொண்டை நாட்டிலுள்ள ஊர். செங்கற்பட்டு மாவட்டத்தில் சென்னைக்கு வடக்கே ஐந்து மைல் தொலைவில் உள்ளது. சுந்தரமூர்த்தி நாயனார் சங்கிலியாரை மணம்புரிந்த இடம். பட்டினத்தார் வீடு பெற்ற இடம்.

இவ்வூர்க் கோயிலில் சோழ மன்னர்களில் மதுரை கொண்ட கோப்பரகேசரி வர்மன், உத்தம சோழன், முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழன், முதலாம் இராசாதிராச சோழன், முதற் குலோத்துங்கன் முதலானோர் காலங்களிலும், சுந்தரபாண்டியன் காலத்தும் கங்கபல்லவ மன்னர்கள், இராஷ்டிர கூட மன்னன் கன்னரதேவன், விசயநகர மன்னர்கள், சம்புவராய மன்னர்களில் இராசநாராயண சம்புவராயன் காலத்தும் வெட்டப் பெற்ற கல்வெட்டுகள் உள்ளன. கல்வெட்டுகளில் இறைவர் திருப்பெயர்களில் மகாதேவபட்டாரர் என்ற பெயரும் காணப் பெறுகிறது. இவ்வூர் சயங்கொண்ட சோழமண்டலத்துப் புழற் கோட்டத்துப் புழல்நாட்டில் உள்ளதென்று காணப்பெறுகிறது. முதற் குலோத்துங்கன் காலக் கல்வெட்டில் இராசேந்திர சோழ வளநாட்டுப் புழல்நாட்டில் உள்ளது என்று காணப்பெறுகிறது.

## 127 தில்லை

தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ளது. சிதம்பரம் என்று வழங்கப் பெறுவது சிதம்பரம் வட்டத்தின் தலைநகர். இவ்வூரில் பல கோயில்கள் உள்ளன. முக்கியமாக நடராசர் கோயில், காளியம்மன் கோயில் போன்றவை. அண்ணாமலைப் பல்கலைக்

கழகம் இங்கே இருக்கிறது. இவ்வூருக்குச் சிற்றம்பலம், புலியூர், தில்லை, சிதம்பரம், சித்திரகூடம் முதலிய பல பெயர்கள் உள்ளன. இவ்வூரின் சிறப்பு நடராஜர் கோயிலின் உள்ளேயே தெற்கில் கோவிந்தராஜப் பெருமாள் பள்ளிகொண்டிருக்கும் பெருமாள் கோயிலும் இருப்பது.

நடராஜர் சிலை கனகசபையிலுள்ளது. மூலத்தானத்துக்கும் இதற்குமிடையில் திரை ஒன்று இருக்கிறது. சில சிறப்பு நாட்களில் தான் அது விலக்கப்படும். இக்கோயில் தெற்கு நோக்கியுள்ளது. இக்கோயில் 7-ஆம் நூற்றாண்டின் மத்தியிலேயே புகழ், பெற்று விளங்கியது.

தஞ்சைச் சோழர்கள் சிற்றம்பலநாதரைத் தம் குலதெய்வமாகப் போற்றினர். சபையைப் பொன்னால் வேய்ந்தனர். 'கனக சபை' என்று பெயர் பெற்றது. இறைவன் ''கனகசபாபதி' எனப் பெற்றார். இக்கோயில் சுமார் நாற்பது ஏக்கர் நிலத்தில் அமைந்துள்ளது.

கீழைக்கோபுரம் கி. பி. 1250-இல் ஆண்ட மதுரை சுந்தர பாண்டியத் தேவனால் கட்டப்பெற்றது. பின்னர் பச்சையப்ப முதலியாரால் செப்பனிடப் பெற்றது. வடகோபுரம் 16-ஆம் நூற்றாண்டில் விஜயநகரப் பேரரசர் கிருஷ்ணதேவராயரால் அவர் ஒரிஸ்ஸாவை வென்றதின் நினைவாகக் கட்டப்பெற்றது. தெற்குக்கோபுரம் 13-ஆம் நூற்றாண்டில் கோப்பெருஞ்சிங்க தேவன் என்ற பல்லவ அரசனால் கட்டப்பெற்றது.

### கல்வெட்டுகள்

1570-ஆம் ஆண்டு விசயநகரக் கல்வெட்டும், 1804-ஆம் ஆண்டுச் சாசனம் ஒன்றும் இவ்வூர் இன்றிருப்பதைவிட மிகப் பெரிய ஊராக இருந்தது எனத் தெரிவிக்கின்றன. இது தனியூராய்ப் பல சிற்றூர்களைத் தன்னகத்து அடக்கிய ஒரு பேரூராக இருந்ததெனப் பன்னிரண்டாம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. இவ்வூரைப் பற்றிய கல்வெட்டுகள் 271 உள்ளன. அவற்றில் பெரும்பாலன கோப்பெருஞ் சிங்கனைப்பற்றியும், ஜடாவர்மன் சுந்தரபாண்டியனைப் பற்றியும் கூறுவன, இராசேந்திரன் முதல் மூன்றாம் இராசராசன் முடிய உள்ள பல சோழமன்னர்களின் கல்வெட்டுகளும், விஜயநகர மன்னர்கள், நாயக்க மன்னர்கள் ஆகியவர்களின் கல்வெட்டுகளும் இருக்கின்றன,

மாறவர்மன் சுந்தரபாண்டியன் 1219-இல் சோழநாட்டை வென்றதும், இராசராசனின் வேண்டுகோள்படி மீண்டும் அவனுக்குக் கொடுத்ததும் ஒரு கல்வெட்டு மூலம் தெரிகிறது.

ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் (1251-1268) நடராஜரை வணங்கிக் கோயிலைப் பொன்வேய்ந்தான். இவன் தெலுங்கு நாட்டரசரை வென்ற குறிப்பும் ஒரு கல்வெட்டில் உள்ளது.

சில கல்வெட்டுகள் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (1269-1296) புவனகிரியில் நடத்திய போரைப்பற்றிக் கூறுகின்றன.

கிருஷ்ணதேவராயர் (1509-1529) சிதம்பரத்துக்கு வந்ததையும் வடக்குக் கோபுரத்தைக் கட்டியதையும் ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.

## 128 துறையூர்

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் முசிரி வட்டத்தில் உள்ள ஊர். இதே பெயருடன் தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரம் வட்டத்தில் விழுப்புரத்திற்கு அருகேயும் ஓர் ஊர் உள்ளது.

## 129 தென்காசி

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது. தென்காசி வட்டத்தின் தலைநகர். இவ்வூர் விசுவநாதர் கோயிலின் கோபுரம் ஒன்பது நிலையுடையது. இக்கோயில் பராக்கிரமபாண்டியனால் 1463-இல் கட்டி முடிக்கப்பெற்றது.

## 130 நல்லூர்

தஞ்சாவூர் மாவட்டத்தில் பாபநாசம் வட்டத்தில் பாபநாசத்திற்குக் கிழக்கே மூன்று மைல் தொலைவில் உள்ள ஊர். இவ்வூர்க் கோயிலில் பல கல்வெட்டுகள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று வீரராமநாதன் காலத்தில் 1251 முதல் 1271 வரை ஹொய்சளர் சோழமண்டலத்தைக் கைப்பற்றியிருந்தனர் என்று கூறுகிறது.

## 131 பரமக்குடி

இராமநாதபுர மாவட்டத்தில் உள்ளது. பரமக்குடி வட்டத்தின் தலைநகர். வைகையாற்றங்கரையில் இருக்கிறது.

## 132 பூண்டி

இப்பெயருடன் இரண்டு ஊர்கள் உள்ளன. (1) செங்கற்பட்டு மாவட்டத்தில் திருவள்ளூர் வட்டத்தில் ஒன்று உள்ளது

திருவள்ளூர் புகைவண்டி நிலையத்திலிருந்து வடமேற்கே சுமார் ஏழு மைல் தொலைவில் உள்ளது. இங்கே கொற்றலை ஆற்றின் குறுக்கே அணை ஒன்று கட்டி நீர்த்தேக்கம் ஒன்றை அமைத் துள்ளனர். பூண்டி நீர்த்தேக்கத்திற்கு 1948-இல் சத்தியமூர்த்தி சாகர் என்று புதுப்பெயர் இடப்பெற்றது.

(2) தஞ்சாவூர் மாவட்டத்தில் தஞ்சாவூருக்குச் சில மைல் தொலைவில் மற்றொன்று உள்ளது.

### 132 பூந்தமல்லி

பூவிருந்தவல்லி என்று அழைக்கப் பெற்ற இவ்வூர் செங்கற்பட்டு மாவட்டத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வட்டத்தில் உள்ளது. சென்னையிலிருந்து மேற்கே பதின்மூன்று மைல் தொலை வில் உள்ளது. வைணவப் பெரியாராகிய திருக்கச்சி நம்பி வாழ்ந்த ஊர்.

### 133 பெருந்துறை

கோயம்புத்தூர் மாவட்டத்தில் ஈரோடு வட்டத்திலுள்ள ஓரூர். ஈரோட்டிலிருந்து தென்மேற்கில் ஒன்பது மைல் தொலைவில் உள்ளது.

### 134 பேரூர்

கோயம்புத்தூரின் மேற்கே மூன்று மைல் தொலைவில் உள்ள ஓரூர். இவ்வூர் அரசவனம், பிறவாநெறி, மேலைச் சிதம்பரம் முதலிய பெயர்களால் வழங்கப்பெறுகிறது.

தொல்காப்பியம் சொல்லதிகாரம் 42-ஆம் சூத்திரம்; நன்னூல் 392-ஆம் சூத்திரம் ஆகிய இரண்டிற்கும் உதாரணமாக வரும் ஆசிரியன் பேரூர் கிழான் என்ற தொடர் குறிப்பதும் இவ்வூரே.

இவ்வூர்க் கோயிலில் விக்கிரம சோழன், வீரசோழன், வீர ராசேந்திர சோழன் முதலிய அரசர் காலத்துக் கல்வெட்டுகளும் பிற கல்வெட்டுகளும் உள்ளன.

### 135 மயிலாப்பூர்

சென்னையின் தெற்கே அதன் ஒரு பகுதியாக இருக்கும் ஓரூர். "தொண்டை மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்துப் புலியூர் நாட்டைச் சேர்ந்த ஊர்"[5] என்று இவ்வூரைப் பற்றிக் கல்வெட்டுக் கூறும்.

இவ்வூர் மயிலாப்பு எனவும், மயிலாப்பில் எனவும் முற்காலத்தில் வழங்கப் பெற்றது. மயிலார்ப்பு என்பது மயிலாப்பு என மருவியிருக்கலாம் எனக் கூறுகின்றனர். மயிலார்ப்பில் என்பது மயில்களாரவாரிக்கும் இடம் எனப் பொருள்படும்.

இப்போது மயிலாப்பூரில் உள்ள சிவபெருமான் கோயில் பழைய கோயில் அன்று எனவும், கடற்கரையோரத்தில் இருந்த பழைய கோயிலைப் போர்ச்சுகீசியர்கள் அழித்துவிட்டனரென்றும் வரலாற்றாராய்ச்சியாளர் எண்ணுகின்றனர். பழைய கோயில் இக்காலத்திய சாந்தோம் மாதாகோயில் உள்ள இடத்திலோ அதன் அருகிலோ இருந்திருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். திருவொற்றியூர், திருவான்மியூர் கோயில்களைப் போல இக்கோயிலிற் கல்வெட்டிலாமையும் இது பழைய கோயிலன்றென்பதற்குச் சான்று என எண்ணுகின்றனர்.

உமாதேவியார் மயிலாக வந்து சிவபெருமானை வழிபட்ட இடமாகையால் மயிலாப்பூர் என்று பெயர் பெற்றது என்று புராணம் கூறுகிறது.

இவ்வூரில் திருவள்ளுவருக்குக் கோயிலுள்ளது. நேமிநாதத்தில் குறிப்பிடும் நேமிநாதருக்கு இவ்வூரில் கோயில் இருந்தது என்று அந்நூலின் உரைப்பாயிரத்தால் தெரிகிறது. நன்னூலுக்கு உரையெழுதிய மயிலைநாதரும் இவ்வூரினரென்பர்

பின்னிணைப்பு—3

# ஊர்ப் பெயராய்வு தொடர்பான நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள்

## நூல்கள்

1. ஊரும் பேரும்—ரா. பி. சேதுப்பிள்ளை—பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-4—1946
2. பேரும் பெருமையும்—மா. நயினார் சோபிதம் பதிப்பகம். நாகர்கோயில்—1982

## கட்டுரைகள்

1. இடப்பெயராய்வு—கி. நாச்சிமுத்து -- ஆய்வுமலர் — கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைப் பழைய மாணவர் மன்ற ஆண்டு வெளியீடு—தொகுதி 1—1972
2. ஊர்ப் பெயர் மாற்றங்கள் — மா. நயினார் — இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்—பத்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை—1978
3. ஊர்ப் பெயர்கள்—சா. கணேசன். கையேடு-கலைக்காட்சிக் குழு—இரண்டாவது உலகத்தமிழ்க்கருத்தரங்க மாநாடு—1968
4. ஊர்ப்பெயர்களின் உண்மைக் காரணம்—த.கோ. பரமசிவம்—இ. ப. க. த. ம. பதினான்காவது கருத்தரங்கு—ஆய்வுக் கோவை-தொகுதி 3—1982
5. ஊர்ப் பெயரும் மக்களும்—சிவ. மணிகண்டராமன்—இ.ப.க. த.ம. எட்டாவது கருத்தரங்கு—ஆய்வுக்கோவை—1976

6. சுசீந்திரம் கல்வெட்டுகளில் இடப்பெயர்கள்—மா. நயினார் இ.ப.க.த.ம. ஒன்பதாவது கருத்தரங்கு—ஆய்வுக்கோவை —1977.

7. நாட்டுப்புறப் பாடல்களில் இடம்பெறும் ஊர்ப்பெயர்கள்—புஷ்பாமதன்—இ.ப.க.த.ம. பதின்மூன்றாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை தொகுதி 3—1981

8. பழனி—ஊர்ப்பெயராய்வு: பா.அ. மணிமாறன்—இ.ப.க.த.ம. பதினான்காவது கருத்தரங்கு — ஆய்வுக்கோவை — தொகுதி.3—1982.

9. மதுரை—பெயர் ஆராய்ச்சி—மெ. சுந்தரம்—இ.ப.க.த.ம ஒன்பதாவது கருத்தரங்கு—ஆய்வுக்கோவை-1977

10. விலங்குகளும் ஊர்ப் பெயர்களும்—பா. அ. மணிமாறன்—இ.ப.க.த.ம. பதினோராவது கருத்தரங்கு—ஆய்வுக் கோவை, தொகுதி 3—1979.

11. Names of some places changed by passage of time in Periyar District in Tamil Nadu - Pulavar S. Raju The First All-India conference of the Place - names Society of India, Udipi—1979.

12. Place-name stories : Traditions and values-Dr. K. Viswanatha Reddy - The Third All-India conference of the Place-names Society of India, Bhopal—1981.

13. Plant Place-names in Tamil - Dr. S. V. Subramanian and Dr. K. Bhagavathy - The Third All-India conference of the Place-names Society of India, Bhopal—1981.

14. Some place names of Coimbatore district - Natesan, S. and Ramachandra Chettiar C. M.—Journal of the Madras Geographical Association - V. 5—1930-31

15. Some place names in North Arcot district - Ramachandra Chettiar, C.M.—Journal of the Madras Geographical Association - V. 18—1943

16. Some place names in Trichinopally district - Journal of the Madras Geographical Association-V. 8—1933-34.

17. Study of the place names of the Tanjore district V. 11 —1937.

18. Study of Some place names - S. Velusamy - The First All-India conference of the Place-names Society of India, Bhopal—1979.

19. Summary of the article - Oor - Dr. S. Gnanamuthu, The First All - India conference of the Place-names Society of India - Udipi—1979.

20. The Influence of Vijayanagar Empire on Tamil Nadu Place-Names - P. Shanmugam - The First All - India conference of the place names Society of India - Udipi—1979.

**ஆய்வேடுகள்**

**கேரளப் பல்கலைக்கழகம்**

1. சுசீந்தரம் கல்வெட்டுகளில் பெயராய்வு (இடப்பெயர்—ஆட் பெயர்): மா. நயினார்—1974.
2. திருநெல்வேலி மாவட்ட இடப்பெயராய்வு: ஆ. சுப்பிர மணியன்—1974.
3. Place - Names of Coimbatore District: K. Nachimuthu—1973.

**மதுரை காமராசர் பல்கலைக் கழகம்**

1. ஊரும் பேரும்—நத்தம் ஒன்றியம்—மு. பெரியசாமி—1981—82
2. ஊரும் பேரும்—செயங்கொண்டம் ஒன்றியம்—இரா. ஆதிமூலம் ,,
3. ஊரும் பேரும்—திருமயம் ஒன்றியம்—வ. இளங்கோ ,,
4. ஊரும் பேரும்—சாத்தூர் ஒன்றியம்—வெ. குருவம்மாள் ,,
5. ஊரும்பேரும்—கோவில்பட்டி ஒன்றியம்—வே. சரசுவதி ,,
6. திண்டுக்கல் நகர ஊராட்சி ஒன்றியம் —இ. ரெங்கராசு ,,
7. மேலூர் ஊராட்சி ஒன்றியம்—சீ. இராசகோபால் ,,
8. நிலக்கோட்டை ஊராட்சி ஒன்றியம்—சீ. கமலா ,,
9. அலங்காநல்லூர் ஊராட்சி ஒன்றியம்—கி. தனுஷ்கோடி ,,
10. சங்கரன் கோவில் நகர ஊராட்சி ஒன்றியம்—செ. ஜாய் ,,
11. பழனி நகர ஊராட்சி ஒன்றியம்—நா. செல்வராசு ,,
12. கோவில்பட்டி ஊராட்சி ஒன்றியம்—ர. பவளமணி ,,
13. திருச்சுழி ஊராட்சி ஒன்றியம்—அ. கல்யாணி ,,
14. திருவில்லிபுத்தூர் ஊராட்சி ஒன்றியம் —இராம. மைதிலி ,,

15. சேடபட்டி ஊராட்சி ஒன்றியம்—எம். முத்தையா ,,
16. திருப்புவனம் ஊராட்சி ஒன்றியம்—அ. நடராசன் ,,
17. இராஜசிங்க மங்கலம் ஊராட்சி ஒன்றியம்
—எம். மீனாட்சிசுந்தரம் ,,
18. இளையான்குடி ஊராட்சி ஒன்றியம்—கே. பாஸ்கரன் ,,
19. செல்லம்பட்டி ஊராட்சி ஒன்றியம்
— ஆர். பெரியகருப்பன் ,,
20. அருப்புக்கோட்டை ஊராட்சி ஒன்றியம்
—பொன். பாலசுப்பிரமணியன் ,,
21. சிங்கம்புணரி ஊராட்சிஒன்றியம்—இரா. சந்திரசேகரன் ,,
22. திருப்புல்லாணி ஊராட்சி ஒன்றியம்—கி. இளங்கோவன்,,
23. அம்மை ஊராட்சி ஒன்றியம் – எம். பழனிச்சாமி ,,
24. திருப்பரங்குன்றம் ஊராட்சி ஒன்றியம்—த. சரோஜா ,,
25. சின்னமனூர் ஊராட்சி ஒன்றியம்—சா. விமலாதாஸ் ,,
26. உடன்குடி ஊராட்சி ஒன்றியம்
—கன்னிகா விசயசிம்மன் ,,
27. போடிநாயக்கனூர் நகரஊராட்சி ஒன்றியம்
—கலாராணி ,,
28. மதுரை—கிழக்கு ஊராட்சி ஒன்றியம்—ச. பாரதி ,,
29. திருமங்கலம் ஊராட்சி ஒன்றியம்
—சா. மீனாஜெயக்குமாரி ,,
30. மதுரை—மேற்கு ஊராட்சி ஒன்றியம்—மு. மீனா ,,
31. மதுரை—தெருக்கள்—திருமதி. பாத்திமா ,,
32. விருதுநகர் ஒன்றியம்—திருமதி பரிமளா ,,
33. சிவகங்கை ஒன்றியம்—எல். இராமநாதன் ,,
34. வாடிப்பட்டி பஞ்சாயத்து யூனியன் – அனார்கலி ,,
35. ஆத்தூர் ஊராட்சி ஒன்றியம் – தெய்வகன்னி ,,
36. இராசாக்கமங்கலம் ஊராட்சி ஒன்றியம்
—த. இராகினி ,,
37. அகத்தீசுவரம் ஊராட்சி ஒன்றியம் ,,
– சி.வேலாயுதப்பெருமாள்,,
38. தக்கலை ஊராட்சி ஒன்றியம்— த. ஏஞ்சல்குளோரிபாய் ,,
39. தோவாளைஊராட்சி ஒன்றியம்– பா. பொன்னுராசன்,,
40. நாகர்கோவில் நகராட்சி ஊர்ப் பெயர் ஆய்வும் ,,
பண்பாட்டு மரபும்—ரா. மணிகண்டன் ,,
41. அகத்தீச்வரம் ஊராட்சி ஒன்றியம்—மரியசூலியட் ,,

## கலைச் சொற்கள்

(எண் - பக்க எண்)

# நிறுவன வெளியீடுகள்

| | | ரூ. |
|---|---|---|
| 1. | எண்பதில் தமிழ் | 45 00 |
| 2. | பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள் | 8 00 |
| 3. | தமிழர் ஆடைகள் | 16 00 |
| 4. | தமிழர் கண்ட மனம் | 9 00 |
| 5. | தமிழக நாட்டுப்புறக் கலைகள் | 10 00 |
| 6. | தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 14 00 |
| 7. | தமிழர் உணவு | 12 00 |
| 8. | தமிழர் தோற்கருவிகள் | 10 00 |
| 9. | தமிழும் தமிழரும் | 5 00 |
| 10. | Lauguage & Grammar (Heritage of the Tamils) | 22 00 |
| 11. | Cultural Heritage of the Tamils | 20 00 |
| 12. | Literary Heritage of the Tamils | 50 00 |
| 13. | தொல்காப்பியம் – சிறப்புப்பாயிரம் | 10 00 |
| 14. | தொல்காப்பியம்-உரைவளம்-நூன்மரபு | 9 00 |
| 15. | தொல்காப்பியம்-உரைவளம்-மொழிமரபு | 9 00 |
| 16. | தொல்காப்பியம்-உரைவளம்-பிறப்பியல் | 8 00 |
| 17. | தொல்காப்பியம்-உரைவளம்-புணரியல் | 10 00 |
| 18. | தொல்காப்பியம்-உரைவளம்-மரபியல் | 10 00 |
| 19. | தொல்காப்பியம்-உரைவளம்-தொகைமரபு | 8 00 |
| 20. | தொல்காப்பியம்-உரைவளம்-கிளவியாக்கம் | 20 00 |
| 21 | தொல்காப்பியம்-உரைவளம்-உருபியல் | 8 00 |
| 22. | தமிழ் இலக்கியக் கொள்கை-தொகுதி-3 | 8 00 |
| 23. | தமிழ் இலக்கியக் கொள்கை-தொகுதி-5 | 12 00 |
| 24. | தமிழ் இலக்கியக் கொள்கை-தொகுதி-6 | 16 00 |
| 25. | தமிழ் இலக்கியக் கொள்கை-தொகுதி-7 | 15 00 |
| 26. | கூவ நூல் | 7 00 |
| 27. | மனை நூல் | 15 00 |
| 28. | பிரபந்தத்திரட்டு | 16 00 |
| 29. | தந்திவனப்புராணம் | 15 50 |
| 30. | திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத்தமிழ் | 7 00 |
| 31. | சின்ன மகிபன் குளுவ நாடகம் | 5 00 |
| 32. | பணவிடுதூது | 6 00 |
| 33. | கருவூரார் பலதிரட்டு | 12 00 |
| 34. | சுவடியியல் பயிற்சி-கையேடு | 6 00 |
| 35. | கும்மிப்பாடல்கள் | 16 00 |
| 36. | பிரபந்த தீபிகை | 12 00 |
| 37. | கண்மருத்துவம் | 50 00 |
| 38. | தமிழில் விடுகதைகள் | 12 00 |
| 39. | அடியார்க்கு நல்லார் உரைத்திறன் | 12 00 |
| 40. | உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? | 6 00 |
| 41. | The Tamil Writers Directory | 10 00 |
| 42. | Tamil Resarch through Journals | 7 00 |
| 43. | Dr. MU VA | 20 00 |
| 44. | Dissertations on Tamilology | 10 00 |
| 45. | Tirumurugan | 5 00 |
| 46. | Epigraphical Evidence for Tamil Studies | 10 00 |
| 47. | A Study of Peruñkatai | 12 00 |
| 48 | Tamil Drama | 20 00 |
| 49. | Papers on Tamil Studies | 15 00 |

இயக்குநர், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்

டி.டி டி.ஐ. தரமணி, சென்னை-600113.